॥ ஸ்ரீஹரி: ॥

850▲

ஸ்ரீ பரமாத்மனே நம:

# மஹான்களுடைய அமுத மொழிகள்

सन्त-वाणी ( तमिल )




ஸ்ரீஹனுமான் ப்ரஸாத் போத்தார்

॥ ஸ்ரீ ஹரி ॥ [ 850 ]

ஸ்ரீ பரமாத்மனே நம:

# மஹான்களுடைய அமுத மொழிகள்

सन्त-वाणी भाग-1 ( तमिल )




Gita Press, Gorakhpur

*Books are also available at—*

1. Gita Press Sales Depot
Gita Press Mansion, 8/1M, Racecourse
COIMBATORE — 641018
✆ 0422-3202521
2. Gita Press Gorakhpur Book Shop
Electro House N0. 23
Ramanathan Street, Kilpouk
CHENNAI — 600010
✆ (044) 26615959; Fax 26615909

**தமிழாக்கம்: திரு. T.சேஷாத்ரி**

Fourteenth Reprint 2015 5,000

Total 56,000

❖ **Price : ₹ 12**

**( Twelve Rupees only )**

Printed & Published by :

**Gita Press, Gorakhpur—273005 (INDIA)**

(a unit of Gobind Bhavan-Karyalaya, Kolkata)

Phone - (0551) 2334721, 2331250; Fax - (0551) 2336997
e-mail : **booksales@gitapress.org** website : **www.gitapress.org**

[ 850 ] संतवाणी भाग-१ ( तमिल ) 1 B



॥ ஸ்ரீ ஹரி ॥
ஸ்ரீ பரமாத்மனே நம:

# மஹான்களுடைய அமுத மொழிகள்

## (தொள்ளாயிரம் அருள்வாக்குகள்)

## (முன்னுரை)

தூய புகழாளர்களான ஸந்தர்களே! ஆகாசமணியான சூரியன் பூமிக்கு மேலே இருந்துகொண்டு ஒளி தருகிறார். ஆனால் நீங்களோ பூமியில் இருந்துகொண்டே தெய்வீக ஒளியைப் பரப்புகிறீர்கள். நாங்கள் உங்களை வணங்கிப் போற்றுகிறோம்.

சூரியபகவான் பூமிக்குச் சூடு அளிக்கிறார். தாங்கள் தங்கள் உள்ளே உள்ள ஞானக்களஞ்சியத்திலிருந்து ஞான அமுதத்தை அருளி ஜீவாத்மாக்களுக்கு ஸுகமாகிற இதமான சூட்டை அளிக்கிறீர்கள். எங்கே கண்களைத் திறந்து பார்த்தாலும், எந்த நாட்டுக்குப் போனாலும் அங்கெல்லாம் தங்கள் புனிதமான பாதத்தாமரைகளின் ஆனந்தமே உருவான பூத்துகள்கள் இடம்விடாது பொழிந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். தங்கள் சரணங்களுக்கு எங்கள் கோடி கோடி வணக்கங்கள்.

துயர நெருப்பில் வாடும் உலகுக்கு மிகவும் வியத்தகு 'முக்தி' என்கிற ஆனந்தத்தின் செய்தியைச் சொல்கிறவர்களே! இந்த உலகம் தங்களுடைய பவித்திரமான திருவடித்துகள்கள் படுவதாலேயே நாங்கள் வாழத்தக்கதாக இருக்கிறது. மெசபடோமியா மற்றும் அரேபியாவின் வறண்ட பாலைவனங்களில் மூஸா, ஏசு, ரஸூல் (முகம்மது நபி) போன்றோரின் அமுத ஊற்றுக்கள் வெளிப்படாமல் இருந்தால் அங்கே அந்த எரிக்கும் மணற்காட்டில் பொசுங்க

யார் போவார்கள்? ஐரோப்பாவின் சண்டைக்களத்தில் நமக்கு 'சாக்ரடிஸ்', 'பிளேட்டோ,' ''அரஸ்து,'' ''புனித பிரான்ஸிஸ்'' போன்ற மஹாத்மாக்கள் வந்து காட்சி தரவில்லை என்றால் அங்கேயுள்ள மனிதர்களுக்கு அமைதிப்பாடம் யார் சொல்லிக் கொடுப்பார்கள்? ப்ரம்மஞானியான ''லாத்ஸே'', மாஹத்மா ''கன்ஃபியூசஸ்'' இவர்களின் பெயர்களைச் சீனநாடு இன்றும் மரியாதையுடன் நினைவு கூர்கிறது. மேலும் அவர்கள் உபதேசங்கள் அந்த நாட்டின் அழியா ஆஸ்தியாக விளங்குகின்றன. வியாஸர்-வால்மீகி, சுகதேவர்-நாரதர், யாக்ஞவல்கியர்-ஜனகர், வசிஷ்டர், ததீசி, புத்தர்-மஹாவீரர், சங்கரர்-ராமானுஜர், நிம்பார்க்கர்-வல்லபர், மத்துவர்-சைதன்யர், நாநக்-கபீர், ஸூரதாஸர்-துளசி, நம்மாழ்வார்-மாணிக்கவாசகர், ஞானதேவர்-துக்காராம், ஏக்நாத்-ராமதாஸ், ராமகிருஷ்ணர்-ராமதீர்த்தர் முதலிய ஸாது மஹாத்மாக்களைச் சரித்திரத்தில் இருந்து நீக்கிவிட்டோமானால் நம்முடைய புனிதபூமியான பாரத தேசம் கூட வெறும் பாழ்நிலமாகவே மனதில் பதியும். சான்றோர்களே பாரதநாட்டின் சுமிருதிக்காரர்கள். அவர்களே நம்முடைய உண்மையான கவிகள். சான்றோர்களே உண்மையான இறைத் தூதுவர்கள். எல்லோருக்கும் அன்பு, ஞானம், சாந்தி ஆகிய அருமையான பாடங்களைக் கற்பிக்கின்றவர்களும் சான்றோர்களே! அவர்கள் திருவடிகளுக்கு மீண்டும் மீண்டும் நம்முடைய நமஸ்காரங்கள்.

சான்றோர்களே மனித ஜாதியின் உயிர்கள், அவர்களே இந்த ஸம்ஸாரத்தருவின் அமுதப் பழங்கள். சான்றோர்களே நாகரீக சமூகத்திற்கு ஒளிதரும் விளக்குகள். அவர்களே பாபத்தாலும், தாபத்தாலும் பீடிக்கப்பட்டிருக்கும் மானவ ஜாதியை மேலே தூக்கி விடுபவர்கள். எனவே நாங்கள் (நாம்) எல்லா ஜாதிகளையும், எல்லா ஸந்தர்களையுமே குறித்துத் தலைதாழ்த்தி கோடி கோடி வணக்கங்கள் செலுத்துகிறோம்.

**சுவாமி சுத்தானந்தா**

# விண்ணப்பம்

சான்றோர்கள் (ஸந்தர்கள்) உலகைத் தாங்கும் மிக முக்கியமான ஆதாரம். அவர்களுடைய ஒவ்வொரு அசைவுமே இயல்பாக உலகின் நன்மைக்காகவே இயங்குகிறது. அவர்கள் பேச்சில் ஞானமிர்தம் வழியும். அவர்கள் கண்களிலிருந்து பிரேமையின் குளுமையான ஸுகம்தரும் ஒளித்தாரை பாய்ந்து வந்து கொண்டிருக்கும். அவர்களின் சிந்தனையிலிருந்து அனைத்துலகின் நன்மை பிறக்கும். அவர்கள் அருகில் யார் வந்தாலும் வருகின்றவரும் பாப-தாபத்திலிருந்து விடுபட்டு மஹாத்மா ஆகிவிடுவர். அவர்கள் இருக்கிற இடம் புண்ணியத்தலமாகி விடுகிறது. அவர்கள் தரும் அருளுரைகள் பாவனமான நற்கரும சாத்திரமாகி விடுகின்றன. அவர்கள் எந்தச் செயல்களைச் செய்கிறார்களோ, அவை ஆதரிசமாகக் கொள்ளப்படுகின்றன. சான்றோர்கள் எல்லா நாடுகளிலும், எல்லாத் தர்மங்களிலும், எல்லா சம்பிரதாயங்களிலும் இருக்கிறார்கள். ஹிந்துக்கள், முகம்மதியர்கள், யூதர்கள், பார்சிகள் ஆகியோரின் இடையேயும், மேலும் மற்ற எல்லா மதங்களிவும் ஸந்தர்கள் இருந்கிருக்கிறார்கள். ஏதோ ஒரு தேசம் அல்லது காலத்துக்குள் அவர்களை அடக்கிவிட முடியாது. எல்லா நாடுகளிலும், எல்லாக் காலங்களிலும் சான்றோர்கள் இருக்கவே செய்வர். அவர்கள் வெளிப்படையாகவோ அல்லது மறைந்த முறையிலோ உலகுக்கு நன்மை செய்து கொண்டிருக்கின்றனர். அப்படிப்பட்ட சான்றோர்கள் திருவாய் மலர்ந்து அருளிய தெள்ளாயிரம் விலைமதிப்பற்ற 'அருள்மொழிகள்' இந்நூலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவை துயரக் கடலில் முழுகித் தத்தளிக்கும் பாவிகளிலும் பாவிகளான பிராணிகளைக்கூட கரையேற்றி இன்பம் நல்க வல்லவை.

இதில் அநேகமாக எல்லா நாடுகள் மற்றும் எல்லா ஜாதிகளிலும் உள்ள அடியார்களின் அருள் மொழிகளின் தொகுப்பு இருக்கிறது. இவற்றில் பெரும்பகுதி நம்முடைய பெருமதிப்புக் குரிய சகோதரர் ''மாதவ்ஜீ'' அவர்கள் எடுத்துத் தொகுத்தவை. படிக்கும் ஆண்கள், பெண்கள் அனைவரும் இதைப்படித்து மேலான நன்மை பெறுவார்கள் என்று ஆசைப்படுகிறோம் நம்புகிறோம்.

**ஹனுமான் பிரசாத் போத்தார்**

**கீதா ப்ரஸ், கோரக்புர்,**
**ஸ்ரீ ஜந்மாஷ்டமி 2009**
**(விக்ரம ஆண்டு)**

ॐ पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्णमुदच्यते। पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥





ஸ்ரீ ஹரி:

# மஹான்களுடைய அமுத மொழிகள்

அன்பு, பக்தி, ஞானம், வைராக்யம். மேலும் நல்லொழுக்கம் பற்றி பெரியவர்கள், (மஹாத்மாக்கள்) அருளுரைகளின் தொகுப்பு.

1. ஸச்சிதானந்தமயமான ப்ரபு''விற்கு அநேக உருவங்கள் உண்டு. எந்த ஸாதகன் (பரமாத்மாவை அடைய 'தவம்' செய்பவன்) ஹரியினுடைய, எந்த உருவத்தைக் கண்டிருக் கிறானோ, அவனுக்கு அந்த உருவம் தான் தெரியும். எல்லா உருவங்களுமே பல உருவங்கள் கொண்ட ஒரே ஹரியினுடையவை தான்.

2. கண்ணாமூச்சி விளையாட்டில் உத்தியை தொட்டு விட்டால் பிறகு தொட்டவன் திருடனாக வேண்டியதில்லை. அதேபோல் பகவானை அடைந்த பிறகு ஸம்ஸாரப் பிணைப்புகள் அவனைக்கட்டமாட்டா.

3. இரும்பு ஒரு முறை ஸ்பரிச வேதிக்கல்லை (தங்கமாக்கும் கல்) தொட்டுத் தங்கமாகிவிடும். அதற்குப் பிறகு அதை மண்ணுக்குள் அடைத்து வை அல்லது குப்பையில் எறிந்துவிடு. அது எங்கிருந்தாலும் தங்கமாகவே இருக்கும், இரும்பாகாது. இதே போல் பகவானை அடைந்தவன் நாட்டிலிருந்தாலும் சரி, காட்டிலிருந்தாலும் சரி அவன் மேல் கறை ஒன்றும் படாது.

4. ஈச்வரனை அடைந்த பிறகும் மனிதனின் உருவத் தோற்றம் அப்படியே தான் இருக்கும். ஆனால் அவனிடமிருந்து தீய செயல்கள் தோன்றா.

5. ஈச்வரனைத் தரிசித்த பிறகு மனிதன் உலக வலையில் சிக்க மாட்டான். ஈச்வரனை விட்டுவிட்டால் ஒரு கணம் கூட அவனுக்கு அமைதியிருக்காது. உயிரே போனதுபோல் கஷ்டப்படுவான்.

6. ஈச்வரனிடம் செல்ல அநேக வழிகள் உண்டு. எல்லா மதங்களுமே அவற்றைத்தான் காட்டுகின்றன.

7. ஏ மனிதர்களே! நீங்கள் உலகியல் பொருட்களில் மயங்கி இருக்கிறீர்கள். இவற்றை விட்டு ஈச்வரன் கிடைக்க வேண்டுமென்று அழுதீர்களானால் (தீவிரமாக வேண்டினீர் களானால்) ப்ரபு அதே கணத்தில் உங்களைத் தன் மடியில் தூக்கி வைத்துக் கொண்டுவிடுவார்.

8. கடவுளைக் காண விரும்பினால் மாயையை ஒதுக்கு.

9. பகவான் அந்நியருமல்ல. தொலைவில் உள்ளவரும் அல்ல. கிடைக்காதவருமல்ல. இந்த உண்மையை உறுதியாகக் கொள்.

10. உன்னை இங்கே அனுப்பியவன் முதலிலேயே உன் உணவையும் இங்கே ஏற்பாடு செய்துவிட்டான்.

11. எந்த ஸாதனையைச் செய்யத் தீவிர ஆவல் கொண்டாயோ, அதற்கேற்ற குருவை பகவான் அனுப்பி வைப்பார். குரு கிடைப்பதற்கென்று ஸாதகன் கவலைப்பட வேண்டிய தேவை ஏற்படுவதில்லை.

12. பார்ப்பதற்கு மனிதன் ஒருவன் அழகனாக இருக்கிறான். ஒருவன் அழகு இல்லாதவனாக இருக்கிறான். ஒருவன் ஸாது, மற்றொருவன் கயவன். ஆயினும் எல்லோருடைய உள்ளத் திலேயும் ஒரே ஈச்வரன் தான் வீற்றிருக்கிறார்.

13. கயவன் உள்ளேயும் ஈச்வரன் வாசமுண்டு. ஆனால் அவனுடைய சேர்க்கை தகாதது.

14. ஸாதனை (முயற்சி) நிலையில் உபாஸனையை நகைக்கிறவர்கள், தார்மீகர்களை நிந்திக்கிறவர்கள் இவர்களிடம் இருந்து ஒரேயடியாக ஒதுங்கியிருக்க வேண்டும்.

15. மாயையை அடையாளம் கண்டு கொண்டவுடனேயே அது பறந்தோடிவிடும்.

16. பாலில் வெண்ணெய் இருக்கிறது; கடைந்தாலே கிடைக்கும். ஈச்வரனை அடைய ஸாதனை புரி, பஜனை செய்.

17. ஒரு ஞானம், ஞானம் (உறுதியாக ஒன்றைப் பற்றுவது) பல ஞானங்கள் அக்ஞானம்.

18. ஈச்வரன் உருவமுடையவன், அருவமானவன். இன்னும் என்ன என்னவோ! நாம் அறியோம். உனக்கு எது நல்லது என்று படுகிறதோ, அவ்விதம் நினைத்து அழை. அதன் மூலமே அவனை அடைவாய். கற்கண்டுத் துண்டை எங்கிருந்து உடைத்து எந்தவிதமாகச் சாப்பிட்டாலும், அது இனிப்பாகவேயிருக்கும்.

19. மனது தூய வெள்ளைத்துணி, எந்த நிறத்தில் முழுக்குவாயோ அந்த நிறம் ஏறி நிற்கும்.

20. ஏங்கி அழும் பிராணன்களுடன் (மிகவும் கவலையுடன் ஈச்வரனை அழைக்கின்றவனுக்கு) குரு தேடவேண்டிய அவசியமில்லை.

21. உண்மையான சீடன் குருவின் வெளிச் செயல்களில் நாட்டம் காட்டமாட்டான். குருவின் ஆணையை மட்டுமே தலை வணங்கி நடத்துவான்.

22. வீட்டில் பூச்சி ஒருமுறை வெளிச்சத்தைப் பார்த்துவிட்டு மீண்டும் இருட்டில் செல்லாது. எறும்புகள் வெல்லத்திலேயே உயிரைவிடும். அதைவிட்டு அப்பாற்போகாது. பக்தனும் ஒருமுறை ஈச்வர தரிசனத்தைச் சுவைத்து விட்டானானால், அதற்காகவே உயிரை விடுவான். அப்பாற் செல்ல மாட்டான்.

23. உலகில் வாழ்ந்து கொண்டே சாதணை செய்திறவர்கள் தாம் உண்மையிலேயே வீரபுருஷர்கள்.

24. உலகிலிருந்து கொண்டே எல்லாக் காரியங்களையும் செய். ஆனால் மனது ஈச்வரனை விட்டு நகர வேண்டாம்.

25. விலைமகளிர் தங்களுடைய தாய், தந்தை, குடும்பத்தினருடன் இருந்து கொண்டே எல்லாக் காரியங்களையும் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் மனதோ தங்கள் காதலர்களிடமே லயித்து நிற்கிறது. ஏ உலகியல் மக்களே! நீங்களும் மனதை ஈச்வரன்பால் வைத்துவிட்டு தாய், தந்தை, குடும்பத்தினருக்கு உழைத்துக் கொண்டிருங்கள்.

26. கடவுளைக் காண விரும்புவர்கள் அவன் பெயரில் நம்பிக்கையும், உண்மை-பொய்யின் விவேகமும் கொண்டிருக்க வேண்டும்.

27. மனதை சுதந்திரமாக விட்டுவிட்டால் அது நாலாவிதமாக சங்கற்ப, விகற்பங்களைச் செய்யத் தொடங்கும். ஆனால் ''விசாரம்''என்ற தோட்டியினால் (அங்குசத்தால்) ஒரு அடி அடித்தால் அது நின்றுவிடும்.(விசாரம் - பரம்பொருளைப் பற்றிச் சிந்திதால்

28. ஹரியின் பெயரைக் கேட்டவுடனேயே கண்களில் இருந்து உண்மையான அன்புக் கண்ணீரைச் சொரிகின்றவர்களே நாமப்பி ரேமிகள் (கடவுள் பெயரில் பக்தி கொண்டவர்கள்)

29. முழுகி எழுந்து கொண்டேயிருங்கள். ரத்தினம் கிடைத்துவிடும். பொறுமையுடன் தைரியமாக சாதனை செய்து கொண்டேயிரு. உரிய நேரத்தில் பகவான் கண்டிப்பாய்க் கருணை காட்டுவான்.

30. சான்றோர்கள் சேர்க்கையை (ஸத்ஸாங்கத்தை), தர்மத்தை அனுஷ்டிப்பதில் மிக முக்கியமான அங்கமாகக் கொள்ள வேண்டும்.

31. இறக்கும் போது மனதில் எப்படி எண்ணம் எழுகிறதோ, அ:தற்கேற்றவாறே அடுத்த பிறவியில் கதி(பிறப்பு) இருக்கும். ஆதலால் வாழ்நாள் முழுவதும் கடவுளை நினைத்திருந்தால் மிக அவசியம். அப்பொழுது தான் இறக்கும் நேரத்தில் பகவான் மட்டும் நினைவுக்கு வருவார்.

32. குழந்தையைப்போல, ஸாதகனுக்கு அழுகை ஒன்றே பலம்.

33. காய் பெரிதானவுடன் பூ தானே விழுந்து விடுகிறது. தெய்வத் தன்மை வளரவளர மனிதத் தன்மையிருக்காது.

34. மனிதன், தர்மத்தின் ருசியைப் பெறாத வரையில்தான் தர்க்க விதர்க்கம் செய்து கொண்டிருப்பான். ருசித்து விட்டானானால் பேசாமல் ஸாதனையைத் தொடங்கி விடுவான்.

35. ஸாதகன் தொண்டை தழுதழுக்கக் கூவி அழைத்தானானால் அப்போது ப்ரபு தாமதம் செய்வதில்லை.

36. ஈச்வரனுக்கு முடிவில்லாத பெயர்கள், முடிவில்லாத உருவங்கள், எல்லையற்ற கருத்துக்கள், எந்தப் பெயராலோ, எந்த உருவத்தை எண்ணியோ, எந்தக் கருத்தைப் பற்றியோ ஒருவன் கூப்பிட்டால், அவன் அதைக் கேட்கிறான். கூப்பிடுபவன் மனவிருப்பத்தை நிறைவேற்றி வைக்கிறான்.

37. பரமாத்மா ஒருவர் தான் (ஒன்று தான்). அவரை அநேக மனிதர்கள் அநேகவிதமாக வழிபடுகிறார்கள்.

38. எந்த உள்ளத்தில் பகவான் புகுந்துவிட்டாரோ, அந்த உள்ளத்தில் காமம், குரோதம், அஹங்காரம் ஒன்றும் நிற்காது. எல்லாம் ஓடிவிடும்.

39. எல்லா மதங்களுக்கும் மரியாதை காட்டு. ஆனால் உன் மனதுக்கு உன்னுடைய மதத்தைப் பின்பற்றுவதில் தான் திருப்தியிருக்க வேண்டும்.

40. ஸாதனை, பஜனைகள் செய்து மனிதன் ஈச்வரனை அடைவதன் மூலம் தன்னுடைய சொந்த இடத்தை அடைகிறான்.

41. ஈச்வரன் நம்முடையவர். நம்முடைய தாய்போல அவரிடத்தில் கோபித்துக் கொள்ளலாம். கொஞ்சலாம். அது தவறல்ல.

42. ஈச்வரன் எவனுடைய உள்ளத்திற்கு வர விரும்புகிறாறோ, அவனுடைய இதயத்தைத் தான் வருவதற்கு

முன்பே அன்பு, பக்தி, நம்பிக்கை, ஆர்வம் காரணமாக எழும் துடிப்பு ஆகியவற்றால் நிரப்பி விடுகிறார்.

43. இதயம் அலையாமல் நிலையாக இருந்தால் தான் ஈச்வர தரிசனம் கிடைக்கும். இதயதடாகத்தின் மேல் ஆசைக் காற்று அடித்துக் கொண்டிருக்கும் வரை ஈச்வர தரிசனம் இயலாத ஒன்று.

44. உண்மையாக நம்புகின்ற பக்தனுடைய நம்பிக்கையும், பக்தியும் என்ன ஆனாலும் நாசத்தை அடைவதில்லை. பகவானைப் பற்றிய பேச்சைக் கேட்டவுடன் அவன் பித்தனாகி விடுகிறான்.

45. நம்பிக்கையுள்ள பக்தன் ஈச்வரனைத் தவிர உலகில் சொத்தையோ, மானத்தையோ மற்ற எதையுமே அடைய விரும்பமாட்டான்.

46. உலகில் கடவுள் ஒன்றே ஸத்தியம் (உண்மை) மற்றதெல்லாம் அஸத்தியம் (பொய்).

47. கிடைக்கப் பெறாத மனிதப் பிறவி பெற்றும்கூட, எவன் ஈச்வரனை அடைய முயற்சி செய்யவில்லையோ அவன் பிறவி வீண்.

48. கடவுளிடம் பக்தியும் இடையறாத நிஷ்டையும் கொண்டு உலகியலில் முழுமையுடன் ஈடுபட்டாலும் உயிர் ஸம்ஸார பந்தத்தில் சிக்காது.

49. கடவுளுடைய திருவடிக்கமலங்களை எவன் பிடித்துக் கொண்டிருக்கிறானோ, அவன் உலகிற்கு அஞ்சுவதில்லை.

50. பகவானின் பாதகமலங்களைப் பிடித்துக் கொண்டு ஸம்ஸாரத்தில் வேலை செய். பந்தத்தின் பயம் இல்லை.

51. முதலில் கடவுளையடைய முயற்சி செய். அதற்குப் பிறகு எதை வேண்டுமானாலும் விரும்பு.

52. யார் கடவுளை நம்பியிருக்கிறானோ, அவன் கடவுள் நடத்தியபடியே நடப்பான், தானாக அவன் முயல்வதில்லை.

53. லக்ஷக்கணக்கில் குரு கிடைக்கலாம். ஆனால் சீடன் ஒருவன்கூட கிடைப்பதில்லை. உபதேசம் செய்ய பலர் உண்டு. உபதேசப்படி நடப்பவன் மிகவும் குறைவு.

54. ஈச்ரன் ஒளி எல்லோர் உள்ளத்திலும் சமமாக இருந்தபோதிலும், ஸாதுக்களின் உள்ளத்தில் அது அதிகம் பிரகாசிக்கிறது.

55. சமாதி நிலையில், குளத்தில் விட்டவுடன் உயிருள்ள



மீனுக்கு எவ்வளவு ஆனந்தம் கிடைக்கிறதோ, அவ்வளவு ஆனந்தம் கிடைக்கிறது.

56. ஞானம் ஆண்; பக்தி பெண்; ஒருவன், மாயை என்ற பெண்ணிடத்திலிருந்து பரம விரக்தன் ஆகும்பொழுதுதான் விடுபட முடியும். பெண்ணிடம் பெண்ணிற்கு கவர்ச்சி ஏற்படுவதில்லை. அதனால் பக்தி செய்பவனை மாயை தன் வலையில் வீழ்த்த முடிவதில்லை. மாறாக, பக்தி செய்வதால், மாயை தானாகவே விலகிவிடுகிறது.

57. மை அறையில் எவ்வளவு தப்ப முயன்றாலும் கொஞ்சம் கறைபட்டே விடும். அதைப்போல் இளம்பெண்ணும், பையனும் மிகவும் கவனமாயிருந்தாலும்கூட கொஞ்சமாவது ஆசை எழவே செய்யும்.

58. கண்ணாடி, சுத்தமாயிருந்தால் முகம் நன்கு தெரியும். அதேபோல் இதயம் சுத்தமாயிருந்தால் பகவானின் உருவம் நன்கு தெரியும்.

59. ஈச்வரனை நம்முடையவன் என்று எண்ணி ஒரே உணர்வுடன் அவனுக்கு சேவை பூஜை செய்வது பக்தியோகம்.

60. கலியுகத்தில் மற்ற யோகங்களைவிட பக்தியோகத்தினால் ஈச்வரன் சுலபமாக கிடைத்து விடுகிறான்.

61. த்யானம் செய்ய விரும்பினால் மூன்று இடங்களில் செய். மனதில் வீட்டு மூளையில், வனத்தில்.

62. ஈச்வர ஞானமே ஞானம். மற்றதெல்லாம் அக்ஞானம்.

63. பகவான் பக்திக்கு வசப்படுகிறார். அவர் அன்பையும், பற்றையும் எதிர்பார்க்கிறார்.

64. எவன் மனதில் ஈச்வரனிடத்தில் அன்பு பிறந்துவிட்டதோ, அவனுக்கு உலகின் எந்த ஸுகமும் பெரிதல்ல.

65. யார் ப்ரபுவின் அன்பில் பித்தனாகி விடுகிறானோ, எவன் தன்னுடைய எல்லாவற்றையும் அவருடைய பாதங்களில் ஸமர்ப்பணம் செய்து விடுகிறானோ, அவனுடைய சுமையை முழுமையாக ப்ரபு தன்மேல் ஏற்றிக் கொள்கிறான்.

66. ஸம்ஸாரத்தில் பிறந்த பிறகு பகவானைப் பற்றி தர்க்கம். கெட்டிக்காரத்தனம், வாதம் முதலியன செய்வதால் ஒரு பயனுமில்லை. ப்ரபுவை அடைந்து ஆனந்தத்தை உணர வல்லவனே பாராட்டுக்குரியவன். அவனே தன்யன் (பாக்யம் செய்தவன்)

67. ஜன்ம ஜன்மாந்திரங்களில் (வரும் பிறவிகளில்) எப்பொழுதாவது எல்லா மனிதர்களும் கடவுளைப் பார்க்கவே செய்வார்கள்.

68. ஊசியில் நூலை நுழைக்க விரும்பினால் நூலின் நுனியை மெல்லியதாக்கு. மனதை ஈச்வரனுக்குள் கோர்க்க விரும்பினால் ''தீன''னாக எளியவனாக, அகிஞ்சனாக (ஒன்று மற்றவனாக) ஆகிவிடு.

69. பக்தனின் இதயமே பகவானின் ஆசனம்

70. உலகில் ஒருவன் எவ்வளவு பொறுத்துக் கொள்வானோ அவ்வளவு மஹாத்மா ஆவான்.

71. எவனுடைய மனமாகிற திசை காட்டும் யந்திரம், பகவானுடைய பாதத்தாமரைகளை நோக்கியிருக்குமோ, அவன் மூழ்கிவிடுவோம், வழியை மறந்து விடுவோம் என்று அஞ்ச வேண்டாம்.

72. ஸாதனைப் பாதையில் பலமுறை விழுந்து எழ வேண்டியிருக்கும். ஆனால் மீண்டும் முயன்றால் ஸாதனை சரியாகிவிடும்.

73. எப்பொழுதுமே உண்மை பேசவேண்டும். கலிகாலத்தில் உண்மையைப் பற்றுக்கோடாகக் கொண்ட பிறகு வேறு ஸாதனை தேவையில்லை. ஸத்தியமே கலிகாலத்தில் தவமாகும்.

74. உலகில் புகழ், பழி இவற்றை சட்டை செய்யாமல் ஈச்வரன் பாதையில் நடக்க வேண்டும்.

75. ஒரு மஹாத்மாவின் கிருபையால் எவ்வளவோ உயிர்கள் கரையேறுகின்றன.

76. ஸாதகன் உள்ளத்தில் எந்த ஆசை எவ்வளவு குறைவாக இருந்தாலும் ஸாதனை அவ்வளவும் பயனற்றுப் போகும்.

77. ஈச்வரனிடத்தில் எப்பொழுதும் மூழ்கியிருப்ப -வனுடைய பிரேம பக்தி ஒருபொழுதும் உலர்வதில்லை. ஆனால் இரண்டொரு நாள் பக்தி செய்துவிட்டு திருப்தி அடைந்து சும்மா இருப்பவனுடைய பக்தி உறியிலிருக்கும் ஓட்டைக் குடத்தின் நீர் போல் இரண்டொரு நாளில் காய்ந்துவிடும்.

78. உலகில் எங்கும் வியாபித்திருக்கிறான் ஈச்வரன். ஆனால் அவனை அடைய ஸாதனை செய்ய வேண்டும்.

79. எந்த மனதைக் கொண்டு ஸாதனை செய்ய வேண்டி யிருக்கிறதோ, அது விஷயங்களில் (புலன்கள் நாடும் பொருட்களில்) ஆசை கொண்டு விட்டால் பிறகு ஸாதனையில் ஈடுபட முடியாது என்று அறிந்து கொள்.

80. தண்ணீரில் படகு இருந்தால் நஷ்டமில்லை. ஆனால் படகில் தண்ணீர் இருக்கக் கூடாது. ஸாதகன் உலகில் இருக்கலாம் கேடில்லை. ஆனால் ஸாதகனின் உள்ளே (மனதில்) ஸம்ஸாரம் இருக்கக்கூடாது.

81. மனதையும், முகத்தையும் ஒன்றாக்குவதே ஸாதனை.

82. ஈச்வரன் மிகப் பெரியவனாயிருந்தும் கூட பக்தன் கொடுக்கும் அல்பமான உபகாரப் பொருளையும் அன்புடன் மகிழ்ந்து ஏற்றுக் கொள்கிறான்.

83. எந்த மனிதனுக்கு ஈச்வரனுடைய பெயரில் ருசி இருக்கிறதோ, பகவானிடத்தில் எவன் பற்றுக் கொண்டு விடுகிறானோ, அவனுடைய ஸம்ஸார ஆசையும், அதனால் ஏற்படும் விவகாரமும் கண்டிப்பாய்ப் தூரப் போய்விடும். அவனுக்கு பகவானுடைய கிருபை ஸர்வ நிச்சயம்.

84. தன்னுடைய அவ்வளவு வினைப்பயனையும் ஈச்வரனிடம் ஒப்படைத்துவிடு. தனக்கென்று எந்தப் பயனையும் விரும்பாதே.

85. வாசனை (கருமத்தின் பதிவு) கொஞ்சம் இருந்தால் கூட கடவுள் கிட்டமாட்டார்.

86. அஹங்காரம் மறைந்தால் ஆண்டவன் கிட்டமாட்டார். அகம் தொலைந்தால் அல்லலும் தொலையும்.

87. நான் ப்ரபுவுக்கு அடிமை. நான் அவன் குழந்தை. நான் அவனுடைய அம்சம். இந்த அஹங்காரம் இடையறாது இருந்தால் நல்லது. பகவானைக் கொணர்ந்து தரும் அஹங்காரம் அது!

88. யாருடைய ஸாதனை இங்கு சரியாகயிருக்கிறதோ, அவனுக்கு அங்கேயும் சரியாய் இருக்கும். இங்கு சரியில்லாத வனுக்கு அங்கும் சரியிருக்காது.

89. யாருக்கு எப்படிப்பட்ட (உணர்வு) இருக்கிறதோ, அவனுக்கு அப்படிப்பட்ட பயனே கிடைக்கும்.

90. வெள்ளைத்துணியில் மை கொஞ்சமே பட்டாலும் கறை தெளிவாகத் தெரியும். அதேபோல் தூய மனிதர்களின் சிறிய குறைகூடப் பெரிதாகத் தெரியும்.

91. எந்த வீட்டில் தினந்தோறும் ஹரிகீர்த்தனம் நடக்கிறதோ, அங்கே கலியுகம் புக முடியாது.

92. பகவானை நம்பியிருக்கும் பொழுது, இது நடக்க வில்லையே, அது கிடைக்கவில்லையே என்கிற கவலைக்குள் விழாதே.

93. நம்புகின்ற பக்தன் வாழ்நாள் முழுவதும் பகவத் தரிசனம் கிடைக்காது போனாலும் கூட பகவானை விடமாட்டான்.

94. இந்த சம்சாரம் சுவர் கட்டப்படாத கிணறு, கரையில் மிகக் கவனமாக நிற்க வேண்டும், சற்றே அயர்ந்தாலும் கிணற்றில் விழுந்துவிடுவாய். பிறகு மேலே வருவது கஷ்டமாகிவிடும்.

95. ஏ! சம்சாரி! இந்த சம்சாரத்தின் எல்லா வேலையையும் செய். ஆனால் உன் முகத்தை அதற்கு எதிர்புறமாக வைத்துக் கொள்.

96. பெண்ணும், பொன்னும், மாயை, அவைகளின் ஈர்ப்பில் விழுந்துவிட்டால் உயிரின் சுதந்திரம் போய்விடும். இவற்றின் மேலுள்ள மோகத்தின் காரணமாக உயிர் உலக பந்தத்தில் சிக்கிக் கொள்கிறது.

97. சம்சாரத்தில் இருக்கிற வரையில் சுகமும், துக்கமும் இருக்கவேயிருக்கும். ஈச்வரன் விஷயம் தனி, அவர் பாதத்தாமரைகளில் மனதை ஈடுபடுத்துவது வேறு விஷயம் துக்கத்தின் பிடியிலிருந்து விடுபடுபதற்கு வேறு உபாயமே கிடையாது.

98. ஸாதுக்களின் சேர்க்கையினால் உயிருடைய (ஜீவனுடைய) மாயை என்ற போதை இறங்கி விடுகிறது.

99. யார் சொல்வதைக் கேட்டு பத்து பேர் நல்ல தூண்டுதல் பெற்று நல்ல காரியம் செய்கிறார்களோ அவரிடத்தில் பகவானுடைய சிறந்த தன்மை அதிகம் இருக்கிறது என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

100. எவன் நான் ஜீவன் என்று நினைக்கிறானோ அவனே ''ஜீவன்'' ''சிவன் நான்'' என்று நினைக்கிறவன் ''சிவன்''.

101. பகவான் ஒருவனைப் பிடித்துக் கொண்டிருப்பதனால் இந்த உலகம், மேலுலகம் இரண்டிலுமே அநேக லாபங்கள் உண்டு. ஆனால் ஈச்வரனை விட்டுவிட்டால் உயிருக்கு எல்லாமே வீணாகிவிடுகிறது.

102. வியாகுலத்துடன் (மனம் வருந்தி) அவனை நோக்கி அழுதால் அவன் கிடைத்து விடுவான். மக்கள் பிள்ளைகுட்டிக்காக, பணம் காசுக்காக எவ்வளவு அழுகிறார்கள்? ஆனால் பகவானுக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடுவதில்லை. அவரை வேண்டி அழு, கண்ணீர் விடு, அவரை அடைவாய்.

103. ஈச்வரனை அடையும் ஒரே உபாயம் நம்பிக்கை தான். நம்பிக்கை பெற்றவன் விரும்பியதைப் பெற்றுவிட்டான்.

104. நாக்கில் ராமனையும், பக்கத்தில் கத்தியையும் வைத்துக் கொண்டிராதே.

105. ''நான் ஈச்வரன் பெயரைச் சொல்கிறேன்; இனி எனக்கேது பாவம், எங்கே பந்தம்''? என்ற அளவுக்கு ஈச்வரன் நாமத்தில் நம்பிக்கை வைக்க வேண்டும்.

106. தெய்வமே எல்லோருக்கும் குரு.

107. எதுவரையில் அஞானம் இருக்குமோ அது வரையில் எண்பத்துநான்கின் சுழற்சி தான் (எண்பத்துநான்கு லக்ஷம் வகை பிறவிகள்).

108. பிறருக்கு என்று அழாதே, ஞானம், பக்திகிடைத்து ஈச்வரனின் பாதகமலங்களில் மனதை லயிக்க வைக்க ஏற்பாடு செய்.

109. பிறரை இகழ்தல், பிறரைப் பற்றி வீண் பேச்சுப் பேசுதல் கூடாது.

110. நம்பிக்கை கரையேற்றும், அஹங்காரம் முழுக்கிவிடும்.

111. முதலில் உலக சுகத்தைத் தேடி, பிறகு தெய்வத்தை அடைய விரும்புகிறாய், மாறாக முதலில் பகவானை எண்ணி, பிறகு உலகியல் ஏன் செய்கிறாய் இல்லை? இதனால் மிகுந்த இன்பம் அடைவாய்.

112. ஸாத்விகனான ஸாதகனிடத்தில் வெளிவேஷம் போடும் எண்ணம் சற்றுக் கூட இராது.

113. பற்று இருக்கும்பொழுதே துவராடை (காஷாயம்) தரிப்பவனுக்கு இந்த லோகம், பரலோகம் இரண்டுமே நசித்து விடும்.

114. வீர ஸாதகன் ஸம்ஸாரத்தின் சுமையைத் தலையில் தாங்கியும் கூட பகவானின் பக்கம் பார்த்துக் கொண்டேயிருப்பான்.

115. பொருள்களில் பற்று எவ்வளவுக்கு எவ்வளவு குறையுமோ, அவ்வளவுக்கு அவ்வளவு தெய்வத்திடம் அன்பு அதிகரிக்கும்.

116. உடலுக்கு எவ்வளவு இன்ப, துன்பம் ஏற்பட்டாலும் பக்தர்கள் அதை ஒரு பொருட்டாக எண்ணுவதில்லை. அவர்களுடைய போக்கு ப்ரபுவின் பாதங்களில் மாசற்ற எண்ணத்துடன் ஈடுபட்டிருக்கிறது.

117. தத்துவ அறிவு ஏற்பட்டவுடன் மனிதனுடைய பழைய சுபாவம் மாறிவிடுகிறது.

118. கணவன், உயிருடன் இருக்கும்பொழுதே பிரம்ம சரியத்தை அனுஷ்டிக்கும் பெண், பெண் அல்ல. ஸாக்ஷாத் தேவி (தேவியே தான்)

119. ஈச்வரன் அன்பைப் பெற்ற மனிதன் மற்ற புறப் பொருள்களை மறந்து விடுகிறான். உலகைப் பற்றி அவனுக்கு எண்ணமே இருப்பதில்லை. ஏன்? தன் உடலையே கூட மறந்து விடுகிறான். இந்த நிலை வந்துவிட்டால் அன்பு கிடைத்துவிட்டது என்று அறிந்து கொள்ளலாம்.

120. பிரபஞ்சத்தில் (உலகச் சூழலில்) மனிதனுடைய ஆத்ம வீழ்ச்சி ஏற்பட்டே விடுகிறது.

121. அஹங்காரம் கொள்வது வீண். வாழ்வோ, இளமையோ எதுவும் இருக்காது. அவையெல்லாம் இரண்டு நாழிகைக் கனவுகள்.

122. தாயாரிடம் அழுது பக்தி வேண்டினால் அவள் கண்டிப்பாய் கொடுப்பாள். இதில் கொஞ்சம்கூட ஐயமில்லை.

123. ஞானப்பித்தன் நிலையில் கடமை என்று ஒன்றும் இருக்காது. அப்போது பகவான் அவன் சுமையைத் தானே எடுத்துக் கொள்கிறார்.

124. ஈச்வரன் இருக்கிறார் என்ற உணர்வு ஏற்பட்ட பிறகு ஒருவன் ஸம்ஸார மாயையில் விழமாட்டான்.

125. ஆயிரம் புத்தகங்கள் படித்தாலும், ஆயிரம் ச்லோகங்கள் சொன்னாலும் ஏங்கி அதனுள் அழுந்தாத

வரையில் அதை (தெய்வத்தை அல்லது தெய்வ பக்தியை) அடைய முடியாது.

126. முதலில் தெய்வத்தை அடைய முயல். குருவின் உபதேசத்தை நம்பிச் செயல்படு. குரு இல்லையென்றால் பகவானிடத்தில் ஏங்கித் தவிக்கும் உள்ளத்துடன் பிராத்தனை செய். அவர் எப்படி இருக்கிறார் என்பது அவர் அருளாலேயே உனக்குத் தெரிந்துவிடும்.

127. ஸம்ஸாரிகள் பணம், பெயர், பொருள் முதலிய ஸாரமற்ற பொருட்களைச் சேர்த்து வைத்துக் கொண்டு ஸுகம் கிடைக்கும் என்று எண்ணுகிறார்கள். ஆனால் இவை ஒரு ஸுகத்தையும் தரமுடியாது.

128. பகவான் பக்தனான ஜீவனை பாவத்தில் உழல விடமாட்டார். அவர் தயவு காட்டி அவனைக் கரையேற்றி விடுவார்.

129. பகவான் எல்லோரையும் பார்க்கிறார். அவராக விரும்பி நமக்கு தரிசனம் தராத வரையில் யாரும் அவரைப் பார்க்கவும் முடியாது. புரிந்து கொள்ளவும் முடியாது.

130. கிழக்குப் பக்கம் நோக்கி நீ போகப்போக மேற்கு திசை ஒதுங்கிப் போகும். இவ்விதமே தர்ம மார்க்கத்தில் எவ்வளவு முன்னேறுவாயோ அவ்வளவு ஸம்ஸாரம் பின்னால் ஒதுங்கிப் போகும்.

131. கலியுகத்தில் அன்பு நிரம்பிய தெய்வபக்தி தான் எல்லாவற்றிலும் உயர்ந்ததும், ஸாரமானதுமான வஸ்து.

132. அன்புடன் ஹரிநாமம் பாடு. அன்புடன் கீர்த்தன ரசத்தில் திளைத்து, பித்தனாகி, நர்த்தனம் செய். இதனால் கரையேறுவாய். இந்த ஸம்ஸார ஸாகரத்தை உறுதியாய்த் தாண்டுவாய்.

133. குருவே தாய், குருவே தந்தை, குருவே குலதெய்வம். பெரிய சங்கடம் வந்தாலும் முன்னும், பின்னும் அவரே நம்மைக் காப்பவர். இந்த உடல், மனம், வாக்கு அவர் பாதங்களில் அமர்ப்பணம்.

134. கீர்த்தனம் செய்வதால் சுதர்மம் வளர்கிறது. (சுதர்மம்-தெய்வத்தை அடையும் வழி) கீர்த்தனத்தால் சுதர்மம் கிடைக்கிறது. கீர்த்தனத்திற்கு எதிரே முக்திகூட வெட்கி ஓடிவிடுகிறது.

135. கலியுகத்தில் பகவானது பெயரை நினைப்பதாலும் (நாமஸ்மரணத்தாலும்), ஹரிகீர்த்தனத்தாலும் எல்லா உயிர்களும் கடைத்தேறுகின்றன.

136. தானங்களில் சிறந்தது அன்னதானம். அதையும் விடச் சிறந்தது ஞானதானம் (அறிவுக்கொடை)

137. உட்கார்ந்து ராம நாம தியானத்தை அனுஷ்டானம் செய்யுங்கள். அதிலேயே மனதை திடப்படுத்தி ஒருமுகப்பட்ட கருத்துடன் ஈடுபடுங்கள். இதை விடச் சிறந்த ஸாதனை வேறொன்றில்லை.

138. பிறர் பொருளையும், மனையையும் தீண்டடப்படாத பொருட்களாகக் கொள்ளுங்கள். இதைவிட நிர்மலமான வேறு தவமில்லை.

139. இந்த கலியுகத்தில் ராம நாமத்தை விட்டால் வேறு ஆதாரம் கிடையாது.

140. விழிப்பு, கனவு, ஸுஷுப்தி (ஆழ்ந்த துயில்) என்ற எந்த நிலையும் நினைவுக்கு வராத வண்ணம் பகவானுடைய உருவத்தை உங்கள் மனதில் அமர்த்திக் கொள்ளுங்கள்.

141. இந்தக் காதுகளால் உன் (ப்ரபுவின்) திருநாமத்தை குணத்தையும் கேட்பேன். இந்தக் கால்களால் தீர்த்தங்களை நோக்கி (புனிதத்தலங்களை நோக்கி) வழி நடப்பேன். இந்த அழியும் உடல் வேறு என்ன பயனுக்கு ஆகும்?

142. ஹே பகவானே! உன்னுடைய பெயரையே அகண்ட ரூபமாக (இடைவிடாத முறையில்) சொல்லிக் கொண்டிருக்கும் படி அப்படிப்பட்ட பிரேம பக்தியைத் தருவாயாக!

143. ஹே கோவிந்தா! சுயத்துதியும், பிறர் நிந்தையும் நான் ஒரு பொழுதும் செய்யக் கூடாது. ஹே ராமா! எல்லாப்

பிராணிகளுள்ளும் நான் உன்னையே பார்க்க வேண்டும். உன்னுடைய அருட்பிரஸாரத்தில் திருப்தி அடைய வேண்டும்.



144. பகவானை ஆவாஹனம் செய்தால் (அழைத்து அமர்த்தி விட்டால்) பிறகு அதில் விஹர்ஜனம் (வெளியேற்றுதல்) கிடையாது. உள்ளம் அவனிடத்தில் லயித்துவிட்டால் பாட்டுக்கூட வராது.

145. தெய்வங்களுக்கு எல்லாம் தந்தையாக எவன் இருக்கிறானோ, அவன் பாதங்களை அண்டிய உடனேயே மாயையெல்லாம் விடுபட்டு விடுகிறது. த்வந்த்வங்கள் எல்லாம் நசிந்துவிடுகின்றன. (இன்பம் - துன்பம், லாபம் - நஷ்டம், புகழ் பழி எனும் இரட்டை)

146. சிந்தனை என்ற புகையில்லாத ஞானதீபத்தை ஏற்றி ஆனந்தம் நிறைந்த அன்புடன் தேவாதி தேவனான ஸ்ரீ ஹரிக்கு

ஆரத்தி எடுப்போம். எல்லா பேதங்களும், விகாரங்களும் பறந்து விடும்.

147. உள்ளே, வெளியே சராசரம் எங்குமே ஸ்ரீ ஹரியே அமர்ந்திருக்கிறார். அவர் என் மனதைக் கவர்ந்து விட்டவர். என்னுடைய, உன்னுடைய என்கின்ற பேத பாவங்களை அகற்றி விட்டார்.

148. யோகம், தவம், கர்மம், ஞானம் எல்லாமே பகவானுக்காகத்தான் பகவானில்லாமல் இவற்றுக்கு ஒரு மதிப்பும் கிடையாது.

149. பகவானுடைய பாதங்களில் ஸம்ஸாரத்தை (உலகியல் வாழ்வின் சிக்கலை) ஸமர்ப்பணம் செய்து பக்தன் கவலையை விட்டு இருக்கிறான். அப்பொழுது இந்த பிரபஞ்சம் (ஸம்ஸாரத்தின் குறைபாடுகள்) எல்லாம் பகவானுடையதாக ஆகிவிடுகின்றன. (பகவான் அவற்றை நல்லனவாக மாற்றி விடுவார்)

150. கங்கை நதி சமுத்திரத்துடன் கலக்கப் போகிறது. வழியிலேயே உலகத்தின் பாவத்தையும், தாபத்தையும் நிவாரணம் செய்கிறது. அவ்விதமே ஆத்ம சொரூபத்தை அடைந்த அருளாளர்கள் தங்கள் இயல்பான செயல்களால் ஸம்ஸாரத்தில் உழலும் கைதிகளையும் விடுவித்துச் செல்கிறார்கள்.

151. ஸாதுக்களில் அன்றாட வாழ்க்கை உலகத்திற்கு முகம் பார்க்கும் கண்ணாடி போலிருக்கும்.

152. எல்லா உயிர்களுக்குள்ளும் ஒரே சமநோக்குடன் ஹரி ஒருவரையே காணவேண்டும்.

153. எவன் சலனமில்லாமல் நிந்தனையை சகித்துக் கொள்கிறானோ, அவன் தாயும் பாக்யம் செய்தவள்.

154. பகவான் தான் எல்லா ஸாதனைகளுக்கும் (நோன்பு, தவங்களுக்கும்) இறுதியில் அடையப்பட வேண்டிய பொருள், அதாவது சாத்தியம். எல்லா சராசர பிராணிகளுள்ளும் பகவானைக் கண்டு அகண்டமான பகவத் புத்தியை நிலையாக

வைத்துக் கொள்ளுதல்,மேலும் எல்லோருடை நன்மைக்கும் முயர்ச்சி செய்தல், அதாவது லோக ஸங்கிரகம், லோகோபரகாரம் (உலகம் அனைத்தையும் சேர்த்துப் பார்த்தல், எல்லோருக்கும் உபகாரம் செய்தல்) இவற்றில் உடல், மனம், உயிரை அர்ப்பணம் செய்தல் - இவையே உண்மையான ஹரி பக்தியாகும்.

155. சமநோக்கு, பற்றற்றிருத்தல், அஹங்காரமின்மை இவற்றுடன், எல்லா உயிர்களுள்ளும் பகவான் நிறைந்து இருக்கிறார் என்று அறிந்து செய்யப்படும் லோகோபகாரமே தலைசிறந்த ஹரி பஜனையாகும்.

156. எல்லாப் பிராணிகளுள்ளேயும் பகவான் இருப்பதை அறிந்து அவர்களின் நன்மைக்காக நான் என்கின்ற எண்ணத்தைத் தவிர்த்து உடல், மனம், வாக்கால் முயல்வதே பகவானுடைய உண்மையான தொண்டு.

157. தூலமாயிருப்பதுதான் சூக்குமம், பார்க்கப்படுவதுதான் பார்க்கப்படாததும், தோற்றம் தருவதே தோன்றாததும், எது ஸகுணமோ அதுவே நிர்க்குணம். எது உள்ளேயிருக்கிறதோ, அதுவேதான் வெளியேயும் இருக்கிறது.

158. பகவான் எங்கும் இருப்பவர் தான். ஆனால் பக்தியில்லாதவர்களுக்கு அவர் தெரியமாட்டார். நீர், நிலம், கல் அவர் எங்கேயில்லை? எங்கு பார்த்தாலும் அங்கே பகவான் இருக்கிறார். ஆனால் பக்தியில்லாதவனுக்கோ எங்கும் வெறும் சூன்யம் தான் கண்ணில்படுகிறது.

159. ஒருமை எண்ணத்துடன் இந்த படைப்பைப் பார்த்தால் பார்வையில் பகவானே நிரம்பியிருப்பார்.

160. எவர் கோவிந்தனைக் காட்டித்தந்தாரோ அந்த குரு புகழுக்குரியவர் (தன்யர்).

161. மெய்யடியார்களுக்கு வீட்டுக்குள்ளே, வெளியே, புறத்தே, உள்ளே, செயலில், சொல்லில், மனதில் பகவத் பக்தியைத் தவிர வேறு ஒன்றும் இருக்காது.

162. அடியார்களுடைய செயல், அறிவு, பக்தி எல்லாம்

ஹரிமயம். அமைதி, பொறை, தயை முதலிய தெய்வ குணங்கள் பக்தர்களுடைய திண்ணையில் புரண்டு கொண்டிருக்கின்றன.

163. பக்தர்களுக்குச் செய்யும் தொண்டு முக்திக்கு வாசல்.

164. பகவான் தாமே பக்தர்களுடைய வீட்டில் புகுந்து அமர்ந்து கொள்கிறார்.

165. ஸத்குருவிற்கு எதிரே வேதங்கள் மௌனமாயின. சாஸ்திரங்கள் வறியதாயின. சொல்லும் வலிவிழந்து விட்டது. ஸத்குருவினுடைய அருள் நோக்கு யார் மேல்படுகிறதோ அவன் பார்வையில் சிருஷ்டி முழுவதுமே ஸ்ரீ ஹரிமயமாக ஆகி விடுகிறது.

166. குருதேவர் அகண்ட நாம ஸ்மரணையைச் செய்வித்தார். அவருக்கு பெருமை வாழ்க!

167. எவனுக்கு ஸத்குருவின் பாதங்கள் கிடைத்து விட்டனவோ, அவன் உலகக் குழப்பத்திலிருந்து முக்தி அடைந்து விட்டான்.

168. இந்த உலகியல் குயுக்தியையெல்லாம் விட்டுவிட்டு எப்பொழுதும் பகவான் பாதங்களை தியானம் செய்ய வேண்டும்.

169. ஸத்குருவின் அரவணைப்பு யாருக்குக் கிடைத்து விட்டதோ, அவனைக் கலிகாலம் ஒன்றும் செய்ய முடியாது.

170. பக்தி, வைராக்யம், ஞானம் இவற்றின்படி தானும் நடந்து, மற்றவரையும் அவ்வழியில் செலுத்துவதன் பெயரே லோக ஸங்கிரமாகும். (அதாவது உலகுக்குச் செய்யும் நல்லுதவியாகும்)

171. ஸித்திகள் வேண்டுவது வெறும் பொழுதுபோக்குத்தான். அவற்றின் மூலம் பரமார்த்தம் கிடைக்காது. அநேகமாக வேஷக்காரர்கள் தான் ஸித்திகளைக் கடைபிடித்து ஏழைகளை ஏமாற்றுகிறார்கள்.

172. கலிகாலம் மிகவும் பயங்கரமானது. இங்கே ஒரே உதவி ப்ரபுவினுடைய பெயர் தான்.

173. உடலை வைத்துப் பார்த்தால் இந்திரனும், எறும்பும் ஒன்றே. உடல் அழியக்கூடியது. எல்லோருடைய உடல்களுமே அழிபவைதான். இந்த உடல் திரையை நீக்கிவிட்டுப் பார். எங்கும் பகவான் காணப்படுவார். பகவானைத் தவிர என்ன இருக்க முடியும்? பார்வை சின்மயமாகிவிட்டால் (அறிவை அறிவால் அறியத் தொடங்கிவிட்டால்) எங்கும் ஸ்ரீ ஹரிதான்.

174. ஸ்ரீ க்ருஷ்ணர் எங்கும் ரமித்துக் கொண்டிருக்கிறார் (இன்பமயமாய் விளையாடிக் கொண்டிருக்கிறார்). அவர் இந்த அனைத்து உலகத்திலும் (படைப்பிலும்) உள்ளேயும், வெளியேயும் வியாபித்திருக்கிறார். நீ எங்கேயிருக்கிறாயோ அங்கேயே பார், அவர் தரிசனம் கொடுப்பார்.

175. காட்சி, காணுதல், காண்பவன் இம்மூன்றையும் தாண்டி அப்பால் பார். எங்கும் க்ருஷ்ணனே! க்ருஷ்ணன் தான்!!

176. பகவான் ஸ்ரீ க்ருஷ்ணனே ஜகம் அனைத்துக்கும் முதலாளி (சுவாமி). அவருடைய ஐச்வரியம், மாதுரியம் (இனிமை) வாத்ஸல்யம் (கருணை) எல்லாமே முடிவற்றவை. அபாரமானவை. ஒருதுளி கிடைத்துவிட்டால் போதும், பெற்றவன் பாக்யசாலி.

177. எல்லா வைபங்களும் உடையவர்கள், நீண்ட ஆயுட்காரர்கள், மிகப்பெருமை பெற்றவர்கள் எல்லோருமே சென்றுவிட்டார்கள். மரணத்தின் வழியே. எல்லோரும் போய் விட்டார்கள். ஆனால் சொரூப தரிசனம் செய்தவன் ஆத்மஞானி. அவன் ஒருவனே தங்கினான்.

178. ஹரி கதையிலே அன்பு காண்கின்ற பேச்சில் தான் இனிமையிருக்கும்.

179. அன்பில்லாமல் சுருதி, ஸ்மிருதி, ஞானம், த்யானம், பூஜை, சிரவணம், கீர்த்தனம் எல்லாமே வீண்.

180. பக்தர்கள் வாழ்க்கையும் ஹரிமயம்; மரணமும் ஹரிமயம். ஹரி தவிர வேறு என்னதான் இருக்கிறது? மரணம் ஏற்படும் போதுகூட ஹரிஸ்மரணத்தைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்?

181. சர்க்கரையில் தித்திப்புத்தான் சர்க்கரை. அதைபோல் சிதாத்மா எதுவோ அதுதான் உலகம். உலகத்தில் ஹரிக்கு நிகராக ஒன்றுமே கிடையாது.

182. எது அழகாயிருக்கிறதோ, அது க்ருஷ்ணனுடைய அம்சத்தால் தான். அதனால் கண்கள் பகவானுடைய தலையணிப் பீலியில் (மயிலிறகில்) சென்று தங்கும்படியாக அவ்வளவு பித்தேறிவிட்டன.

183. எவன் ஒருமுறை க்ருஷ்ணனைப் பார்த்தானோ, அவனுடைய கண்கள் அதற்குப் பிறகு அவனிடமிருந்து அகலாது. மேலும், மேலும் அதே உருவத்தைச் சுற்றி அலைந்து அதிலேயே லயிந்து விடுகிறது.

184. குடும்பக் கடமைகளை விட்டுவிடக் கருதினால், தன்னுடன் எல்லாவற்றையும் மண்ணோடு மண்ணாக்க விரும்பினால், வாழ்க்கையையே முடித்துக் கொள்ள விரும்பினால் க்ருஷ்ணனை அழை.

185. எழுந்திரு. க்ருஷ்ணனுடைய பாதங்களை வணங்கு வெட்கப்படாதே. தற்பெருமையை விட்டுவிடு. மனதில் ஒரு மாற்று எண்ணமும் வைத்துக் கொள்ளாதே. மனப்போக்கைத் திருத்து. கவனமாக ஹரி சரணங்களை வணங்கு.

186. ஸ்ரீ சரணங்களை அடைந்த உடனேயே அஹம். ஸோஹம் என்ற முடிச்சு அவிழ்ந்துவிடும். உலகம் அவ்வளவும் ஆனந்தமயமாய் விடும். அடிமை - ஆண்டான் என்பதன் சிறு அடையாளம்கூட தங்காது தேவி. தேவன் எல்லாம் ஒன்றாகி விடும்.

187. உண்மையான விரக்தன் என்று, பெருமை புகழிலிருந்து ஒதுங்கி நிற்பவனையே சொல்ல வேண்டும். அவனே ஸத் ஸங்கத்தில் நிலைத்து அசங்காமலிருக்கிறான். அவன் தன்னுடையது என்று ஒரு ஸம்பிரதாயத்தை ஏற்படுத்த மாட்டான். புத தர்க்கத்தைத் தொடங்கமாட்டான். தனக்கென்று ஒரு ஆசனதாதை (குரு பிடத்தை)ஏற்படுத்தி அதைக்காக்க முயலமாட்டான். உயிர் வாழ பணிந்து புகழமாட்டான். அவன்

உலகியல் திறமை பெற்றவனாக இருக்க மாட்டான். அவனிடத்தில் ஆடை, அலங்கார ஆசையிருக்காது. வெளியில் கிடைக்கும் உணவில் அவன் ருசி காண மாட்டான். பெண்களைப் (பெண்களாக) பார்ப்பதும் அவனுக்குப் பிடிக்காது.

188. தன்னுடைய மனைவி தவிர மற்ற எந்தப் பெண்ணிடமும் உறவு வைத்துக் கொள்ளாதே. மனைவியிடமும் கூட தகுதியான உறவு இருக்கட்டும். மனதைக் கலைத்துக் கொள்ளாதே.

189. தவறான பெண்ணுறவிலிருந்து எப்பொழுதும் ஒதுங்கி இருக்க வேண்டும். எவன் அபிமானமற்றவனாகவும், ஆசையற்றவனாகவும் ஆகிவிட்டானோ அவனே ஏகாந்தவாசம் செய்ய முடியும் (தனித்திருக்க முடியும்)

190. பெண், பொன், புகழ் இம்மூன்றும் சிரஞ்சீவிப் பதவிக்கு மூன்று பெரிய தடைக்கற்கள்.

191. உண்மையான அனுதாபமும், சுத்தமான ஸாத்விக வைராக்யமும் இல்லாது போனால், க்ருஷ்ணனுடைய பாதங்களை அடையலாம் என்று எதிர்பார்ப்பது அறியாமையே.

192. ''கேள்! என்னுடைய பக்தி பித்தேறியது. அழகிய நீலநிறம் கொண்ட ஸ்ரீராமன் தான் எனக்கு அத்விதீய ப்ரம்ம மாகும். எனக்கு வேறு ஒன்றும் தெரியாது. ராமனை விட்டு பிரம்ம ஞானம் என்று சொல்கிறீர்களே, அது நமக்குத் தேவையில்லை. என்னுடைய பிரம்மம் ராமனே தான்'' என்று ஹனுமான் உரக்கக் கூவிச் சொல்கிறார்.

193. காசுக்கு வாங்கிய மோசமான கள்ளைக் குடிப்பவனே ஆட்டம் போடுகிறானே! பகவானது அன்பாகிய திவ்யமான மதுவை அருந்தியவன் எப்படிச் சும்மா உட்கார்ந்திருப்பான்?

194. இறைவனின் திருவடிகளில் நேரடியாய் (அபரோக்ஷமாய்) நிலைத்து விடும் இன்பம் அரை நொடி அளவானாலும், அந்த ஆனந்தத்திற்கு எதிரே மூவுலகமுமே சொத்தாகக் கிடைத்தாலும் பக்தனுக்கு அது புல்லுக்குச் சமம்.

195. இரக்காமல் தானாக எது கிடைக்கிறதோ, அதை ஸாதகன் மங்களமான ப்ரபுவின் பிரசாதமாக எண்ணிச் சாப்பிட வேண்டும். (அனுபவிக்க் வேண்டும்)

196. மனைவி, பிள்ளை, வீடு, உயிர் எல்லாவற்றையுமே பகாவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். அதுவே பாகவத தர்மம், முக்கியமாக இதன் பெயர் தான் பஜனை.

197. ஸாதுக்களிடமும், ஸந்தர்களிடமும் நட்புக் கொள். அவர்களுடைய அன்பனாகயிரு. சிறந்த நண்பனாகயிரு. எல்லோரிடமும் ஒரே மாதிரியிரு.

198. பகவானிடத்தில் நல்ல ஆசாரத்துடன் (தர்ம நடத்தையுடன்) செய்யப்படும் பக்தி தான் யோகங்களுக்குள் யோகம். வேதாங்தங்களின் களஞ்சியம். ஸித்திகளின் ஸாரம்.

199. கிரஹஸ்தாசிரமத்தில் இருந்து கொண்டே எவனுடைய உள்ளம் ப்ரபுவின் நிறம் பெற்றுவிடுகிறதோ, இதனால் எவனுடைய வீட்டுப்பற்று விலகிவிடுகிறதோ, அவனுக்கு கிரஹஸ்தாசிரமத்திலேயே பகவான் கிடைத்து விடுவார். தன் அறிவிலேயே எல்லா ஸுகமும், சொத்தும் கிடைத்துவிடுகின்றன.

200. ஜீவாத்மா, பரமாத்மா இரண்டும் ஒன்றே, இதை அறிவது தான் ஞானம். இந்த ஒற்றுமையின்பத்தை அறிந்து பரமாத்ம ஸுகத்தை அனுபவிப்பதே நல்ல விஞ்ஞானமாகும்.

201. நானே தெய்வம், நானே பக்தன், பூஜைப் பொருளும் நானே. நானே என்னைப் பூஜித்துக் கொள்கிறேன். இந்த, அபேத நிலை உபாஸனையின் ஒரு உருவம்.

202. இயல்பான இரக்கத்துடன் மக்களுக்கு அன்னம், வஸ்திரம், தானம், மரியாதை இவைகள் கொடுத்து இனிமையாக நடந்து கொள்ள வேண்டும். இதுவே எல்லோருடைய சுதர்மமும்.

203. தந்தை நாராயணனே, தாய் ஸாக்ஷாத் லக்ஷ்மி. இந்த பாவனையுடன் எவன் அவர்களுக்குத் தொண்டு செய்கிறானோ, அவனே நல்ல மகன்.

204. ஓடும் நீரின் மேல் எவ்வளவு கோடுகள் கிழித்தாலும் ஒரு கோடும் விழாது. அதே மாதிரி ஸத்துவ சுத்தியில்லாமல் ஆத்ம ஞானத்தின் ஒரு ஒளிக்கீற்றுகூட வெளியாகாது.

205. மனித உடல் கிடைப்பது பாக்கியம், சாதுக்களின் சேர்கை பாக்கியம், பகவத் பக்தியின் நிறம் ஏறிய (பக்திமயமான) பக்தன் பாக்கியவான்.

206. வைஷ்ணவர்களை ஒரு ஜாதி யென்றும், சாலகிராமத்தைக்கல் என்றும், ஸத்குருவை மனிதன் என்றும் எண்ணுபவன் ஒன்றும் அறியாத பேதை.

207. எவன் தன்னுடைய அடிப்படைப் பெருமையை விட்டு விட்டு அடிமைத்தனத்தில் சிக்குகிறானோ அவனுக்குக் கனவில் கூட சுகத்தின் பேச்சுக் கிடைக்காது.

208. பணத்தாசையில் சிக்கியவனுக்கு யுகத்தின் முடிவிலும் கூட முக்தி கிடைக்காது. எப்பொழுதும் பெண்ணை விரும்பியிருப்பவனுக்கு ஆத்ம போதம் அல்லது பரமார்த்தம் கிட்டுவதில்லை.

209. சூரிய நாராயண தேவர் கிழக்குத் திசையில் வருகிறபொழுது நட்சத்திரங்கள் மறைந்துவிடுகின்றன. அப்படியே பக்தியின் உதய காலத்தில் காமம் முதலியவைகள் தகனம் அடைந்து விடுகின்றன.

210. சத்தியத்திற்குச் சமமாக ஒரு தவமும் கிடையாது. ஒரு ஜபமும் கிடைக்கிறது. சத்தியத்தினால் நல்ல தோற்றம் கிடைக்கிறது. சத்தியத்தினால் சாதகன் பாவமற்றவனாக ஆகிறான்.

211. ஒருவன் வருணத்தில் (ஜாதியில்) எவ்வளவு உயர்ந்தவனாக இருந்தாலும் கூட ஹரியின் பாதங்களில் நோக்கம் உடையவனாக இல்லாவிட்டால் அவனை விட அன்புடன் ஆண்டவனைப் பஜனை செய்கிற சண்டாளன் சிறந்தவன்.

212. ஹரிகீர்த்தனம் உள்ளச்சுத்தத்திற்கு முக்கிய ஸாதனம் (கருவி) பெயரைப் போல் (ஹரி நாமத்தைப் போல்) வேறு எந்த ஸாதனமும் இல்லை.

213. பக்தன் எங்கேயிருக்கிறானோ அங்கே எல்லா திசைகளும் ஸுகமயமாக ஆகிவிடுகின்றன. அவன் நிற்கிற இடத்தில் பெரும் ஸுகங்களெல்லாம் வந்து தங்குகின்றன.

214. அபிமானத்தை அப்படியே விடுவதுதான் த்யாகத்தின் முக்கிய லக்ஷணம்.

215. அபிமானத்தை முழுமையாக விட்டு விட்டுப் ப்ரபுவின் பாதங்களைப் பற்றினாயானால் நீ ஜன்மம், மரணம் என்ற இந்த இரட்டைத்தலைத் தொல்லையிலிருந்து விடுபடுவாய்.

216. உன் இதயத்தில் உள்ளவனைச் சரணடை.

217. ப்ரபுவை அடைவதில் மிகப்பெரிய தடங்கல் தான் என்ற அபிமானம் தான்.

218. ப்ரபுவைச் சரணமடைவதால் அவர் முழு ஆற்றலும் உனக்கு வந்து சேரும். உலக பயம் ஓடிவிடும். கலிகாலம் நடுங்கி நிற்கும்.

219. ப்ரபுவின் பெயரை நினைத்தலே ஸமர்ப்பணத்திற்கான எளிய உபாயம் (ஹரி) நாம ஸ்மரணத்தால் பாவங்கள் பொசுங்குகின்றன.

220. எதை விரும்பித் திருநாமத்தை நினைத்தாலும் ஹரிநாமம் இச்சையை நிறைவேற்றும். ஆனால் எதையும் விரும்பாமல் அப்படிச் செய்தால் அந்தப் பெயர் பாவத்தைப் பொசுக்கிவிடும்.

221. மனதை ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணம் ஆக்கிவிட்டால் பக்தி மகிழ்ச்சியால் மலர்கிறது.

222. அணிமா, லகிமா,கரிமா முதலிய எட்டு ஸித்திகளும் பக்தனின் பாதங்களில் அடிமைகளாகிப் புரளும். ஆனால் பக்தன் அவைகளைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டான்.

223. பக்தி கிடைத்தவனுடைய எல்லா செயல்களுமே ஈச்வரரூபமாகிவிடுகின்றன.

224. பக்தன் எந்தப் பக்கத்திலிருக்கிறானோ அந்தத்

திசையே கிருஷ்ணனாகி விடுகிறது. சாப்பிட உட்காரும் பக்தனுக்கு ஹரியே அறுசுவையாகிறார். அவன் குடிக்க ஹரியே நீராகவும் ஆகிறார்.

225. பக்தன் காலால் நடக்கும்பொழுது சாந்தி அவனுக்கு நடைபாவாடை விரிக்கிறது. ஆரத்தி எடுக்கிறது.

226. சமமும், தமமும் மன அடக்கமும், புலனடக்கமும் பக்தனின் வாயிலில் கையைக் கட்டிக் கொண்டு வேலைக்காரர் களாகி நிற்கும். ரித்தியும், ஸித்தியும் தாஸிகளாக ஆகி வீட்டில் வேலை செய்யும். விவேகம் எடுபிடி ஆளாக எப்பொழுதும் காத்து நிற்கும். ருத்தியும், ஸித்தியும் பணிப்பெண்களாக ஆகி வீட்டில் வேலை செய்யும். விவேகம் எடுபிடி ஆளாக எப்பொழுதும் ஆஜாராக இருக்கும்.

227. பக்தன் ஒவ்வொரு சொல்லிலும் ப்ரபுவின் பேச்சு இருக்கும். கேட்பவன் அதில் லயித்திருப்பான்.

228. நான்கு முக்திகளும் சேர்ந்து பக்தன் வீட்டில் நீர் நிரப்பிக் கொடுக்கும் லக்ஷ்மியுடன் ஹரியும் அவன் பேச்சைக் கேட்பார்கள். பிறகு மற்றவரைப் பற்றிக் கேட்பானேன்? ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம்)

229. பக்தன் பகவானுடைய ஆத்மா, உயிர், வாழ்வு எல்லாம்.

230. ப்ரபு பூர்ணமாக பக்தனுள்ளே இருக்கிறார். பக்தன் முழுமையாக பகவானுக்குள் இருக்கிறான்.

231. ஸாதனங்களுக்குள் முக்கிய ஸாதனம் ஹரிபக்தியே. பக்தியிலும் நாமகீர்த்தனம் தனிச்சிறப்புக் கொண்டது. பெயரைச் சொன்னால் சித்த சுத்தி ஏற்படுகிறது. ஸாதகன் சொரூபத்தில் நிலைக்கிறான்.

232. நாமத்தைப் போன்று வேறு ஸாதனம் கிடையாது. பெயர் ஸம்ஸாரக்கட்டை வெட்டிவிடும்.

233. மனம் எல்லோரையும் கட்டி வைத்திருக்கிறது. மனதைக் கட்டுவது எளிதல்ல. அது தேவதைகளையும்,

வலுவிழக்கச் செய்துவிடும். பிறகு புலன்களை அது என்னதான் செய்ய முடியாது?

234. மனம் கொடுக்கும் அடி மிக வலுவு வாய்ந்தது. அதற்கு எதிரே யார் நிற்க முடியும்?

235. வைரத்தால் வைரத்தை வெட்டலாம். மனத்தால் தான் மனதைப் பிடிக்க முடியும். பூரணமாக ஸ்ரீ ஹரியின் அருள் இருந்தால் தான் அதுவும் நடக்கும்.

236. மனதே மனதுக்கு குரு, மனதே மனதுக்கு ஸாதகம் (உதவி). மனதே மனதுக்கு பாதகம் (கெடுதல் செய்வது) மனம் தான் மனதைக் கொல்வதும்.



237. அஷ்டாங்க யோகம், வேத அத்யயனம், உண்மை பேசுதல், மேலும் உள்ள பல ஸாதனைகளால் எது கிடைக்குமோ, அது பகவானைப் (பஜனை செய்வதாலேயே) பாடுவதாலேயே கிடைத்துவிடும்.

238. எதிலும் பற்று வைக்காதவனே தைரியவான். தைரியம் அவன் பாதங்களைத் தொழும். தைரியம் அற்றவனால் பற்றற்றவனாக இருக்க முடியாது.

239. கோடி கோடி ஜன்மங்களின் அனுபவத்திற்குப் பிறகே எதையும் அண்டியிருக்காத தன்மை (நிரபேக்ஷதா) கிடைக்கிறது. இந்த நிலைமையை விட வேறு எந்த உயர்ந்த ஸாதனமும் கிடையாது.

240. ஏகாந்த பக்தியின் அடையாளம் பகவான், பக்தன் இருவரும் ஒன்றாவது தான், பக்தன் பகவானுடன் சேர்ந்து விடுகிறான். பகவான் பக்தனுள் கலந்து விடுகிறான்.

241. பேத புத்தி எவனிடம் இல்லையோ, எவனுக்கு ஸமத்துவ உணர்வு ஏற்பட்டு விடுகிறதோ அவனுக்கு எங்கும் பகவானின் சொரூப அனுபவத்தின் பரமானந்தம் கிடைக்கிறது.

242. எவன் எப்பொழுதும் ஸமத்துவத்தில் ஒருமுகப்பட்டு நிற்பானோ, ப்ரபுவின் பஜனையில் முற்றிலுமாக ஈடுபட்டு இருப்பானோ, அவன் ப்ரக்ருதியைத் தாண்டி ப்ரபுவின் சொரூபத்தை அடைந்து விடுகிறான்.

243. எவனுடைய இதயத்தில் இன்பப்பொருட்களில் வைராக்யம் ஏற்படுமோ, பேதமற்ற பாவனையுடன் ஸ்ரீ ஹரியின் பாதங்களில் பக்தியிருக்குமோ, பஜனையில் அநந்ய ப்ரீதி இருக்குமோ அவனுக்கு ஸ்ரீ ஹரியே ஏவலாளனாக ஆகிவிடுகிறார்.

244. சிற்றின்பம், வயிறு இவைகளைப் பூர்த்தி செய்வதில் எவன் ஆசை கொண்டவனாகயிருக்கிறானோ, எவன் அதர்மத்தில் ஈடுபாடுகிறானோ, அப்படிப்பட்ட விஷயாஸக்தி உடையவனை அஸாது என்று தெரிந்துகொள். அவனோடு

இணக்கம் வைத்துக் கொள்ளாதே. செயல், சொல் உள்ளத்தினால் அவனைத் தியாகம் செய்துவிடு.

245. பெரிய விரக்தனாகத் தோன்றினாலும் கூட இதயத்தில் அரைகுறை ஆசைகள் கொண்டு, ஆசை காரணமாக கோபம் கொள்கின்றவனுடைய சேர்க்கையும் கெட்ட சேர்க்கை தான்.

246. ஸாத்விகனாக தோன்றியும் உள்ளத்தில் ஸந்தர்களில் குறை காண்கின்றவன் மிகவும் துஷ்டன். இணக்கத்திற்கு அருகதை அற்றவன்.

247. இணக்கத்திற்கு ஆகாத கெட்டவைகளில் ஒருவனுக்கு மிகவும் முக்கியமானது. தன்னுடைய காமமேயாகும். இதை அடியோடு ஒழித்தால் தான் இணக்கத்திற்குத் தகாத நிலை போகும். காமக்கனவுகளை விடுகின்ற மனிதனுக்கு ஸம்ஸாரம் ஸுகமயமாகிறது.

248. காமக்கற்பனையை விடுவதற்கு முக்கியமான கருவி ஸத்ஸங்கம் மட்டும்தான். ஸந்தர்களுடைய திருவடிகளில் படிவதால் காமம் அழிக்கப்படுகிறது.

249. ஸத்ஸங்கத்தை விட்டு எந்த ஸாதனமாயிருந்தாலும் அது ஸாதகனையும் கட்டிவிடக் கூடிய கடினமான பிணைப்பு. ஸத்ஸங்கமில்லாமல் செய்யும் தியாகம் வெறும் போலி.

250. சான்றோர்களுடைய (அடியார்களுடைய) சாதாரண வார்த்தைகள் கூட மகத்தான உபதேசங்கள். ஆகவே அறிவாளிகள் ஸத்ஸங்கம் செய்யவேண்டும். (ஸாதுக்களுடன் கூடி அறிவு பெற்று வாழ்க்கை நடத்துவதால் ஸத்ஸங்கம்) ஸத்ஸங்கம் ஸாதகனுடைய உலக பந்தத்தை அறுத்துவிடுகிறது.

251. இதயத்தில் ப்ரபுவின் த்யானம், வாயில் அவருடைய நாம சங்கீர்த்தனம், காதுகளில் அவருடைய கதைகளின் எதிரொலி, அன்புக் களிப்புடன் அவரது வழிபாடு. கண்களில் ஹரியினுடைய உருவம், கால்கள் அவரிடத்தில் நடந்து செல்ல, நாக்கில் ப்ரபுவின் தீர்த்தத்தின் ரஸம், உணவு அவருடைய

பிரசாதம் மட்டும். ஸாஷ்டாங்க நமஸ்காரம். அவருடைய பக்தர்களை ஆவலாய் அணைத்து கொள்வதில் ஆனந்தம், அரைக்கணமும் விடாமல் அவருக்கு தொண்டு செய்வது. இதுவே எல்லா தர்மங்களுள்ளும் சிரேஷ்டமான தர்மம்.

252. பசு, கன்றிடம் எந்தக் கருத்தைக் கொண்டிருக் கிறதோ, அதேவிதத்தில் ஹரியும் என்னைக் கவனித்துக் கொள்கிறார்.

253. குழந்தைகள் அநேகவிதச் சொற்களில் அம்மாவை அழைக்கும். அம்மாவுக்கு மட்டும் அவற்றின் உண்மைப் பொருள் தெரியும்.

254. சான்றோர்கள் மர்மமான விஷயத்தையும் மனம் திறந்து சொல்லியிருக்கிறார்கள். கையில் தாளம் எடுத்துக் கொள். ஆடு, ஸமாதியின் ஸுகத்தைக்கூட இதற்கு பலியிட்டுவிடு. இந்த நாம ஸங்கீர்த்தனத்தில் பிரஹ்ம ரஸம் நிரம்பி இருக்கிறது.

255. நான்கு முக்திகளும் ஹரிதாஸருக்கு தாசிகள் என்று அறி.

256. ஸதா ஸர்வதா நாம சங்கீர்த்தனம், ஹரி கதைப்பட்டு இருந்தால் சித்தத்தில் இடையறாத இன்பம் கொப்பளித்துக் கொண்டேயிருக்கும். சம்பூர்ண ஸுகத்தையும், அழகையும் இதனுள் நான் அடைந்துவிட்டேன். ஆனந்தத்தில் திளைத்து ஆடுகிறேன். எங்கும் ஒரு குறையுமில்லை. இதே உடலிலேயே, உடல் உணர்வு கடந்த ஆனந்தத்தை அனுபவிக்கிறேன்.

257. பகவந் நாமத்தில் தடையற்ற அன்பு வெள்ளம் பாய்கிறது. ராமன், க்ருஷ்ணன், நாராயணன் என்ற பெயர்கள் அகண்ட வாழ்க்கை. அது எங்கேயும் இடையறாதது.

258. ஹரி பக்தன் பிறந்த குலம் பவித்திரமானது. நாடு புனிதமானது.

259. உலகில் குழந்தை குட்டிகளுக்குச் சொத்தும், நிலமும் வைத்துப் போகின்ற தாய் தந்தையர் என்ன குறைவா? பகவத் பக்தி என்கிற சொத்தைத் தன் குழந்தைகளுக்கு விட்டுப் போகின்றனர் தான் அபூர்வம்.

260. எந்த வீட்டிற்கு பகவான் வருகிறாரோ அந்த வீட்டில் பயங்கரமான ஆபத்திலும் கூட ஸுக, ஸௌபாக்யம் காணப்படும். அதுவே ஹரிக்கு அடையாளம்.

261. குழந்தை, தாயிடம் ''என்னைக் காப்பாற்று'' என்று சொல்ல வேண்டாம். தானாகவே தாய் குழந்தையை மார்புடன் அணைத்து வைத்துக் கொள்கிறாள். இதைப்பார்த்த நான் எதற்குக் கவலைப்படுவேன்? அவன் தலையில் பாரம்; அவன் சுமப்பான்.

262. கேட்காமலேயே தாய் குழந்தைக்கு உணவு ஊட்டி விடுகிறாள். குழந்தை எவ்வளவு சாப்பிட்டாலும் தாய் அலுத்துக் கொள்வதில்லை. விளையாட்டில் மறந்திருக்கும் குழந்தையைத் தாய் அழைத்துவிட்டு சும்மாயிருப்பதில்லை. சென்று, தூக்கி மார்புடன் அணைத்துப் பால் ஊட்டுகிறாள். குழந்தைக்கு ஏதாவது வலி ஏற்பட்டால் தாய், அடுப்பின் மேல் சட்டியில் இருக்கும் தானியம் போலப் பொரிந்து (கவலையால் அலர்ந்து) போகிறாள்.

263. ப்ரபுவினுடைய அன்பு, தாயின் அன்பைவிடச் சிறந்தது. பிறகு என்ன கவலை? அவன் தலையில் பாரம்; அவனே பார்த்துக கொள்ளட்டும்.

264. தாய்க்குப் பிள்ளையை மார்பில் அணைத்துக்கொள்வது தான் பரமஸுகம், தாய் குழந்தை கையில் மரப்பாச்சியைக் (விளையாட்டு பொம்மைகளை) கொடுக்கிறாள். அதை வைத்து விளையாடுவதைப் பார்த்துத் தன் உள்ளத்தை குளிர்வித்துக் கொள்கிறாள். அதற்கு நகையணிவித்து அதன் அழகைப் பார்த்து மகிழ்கிறாள். மடியில் வைத்துக் கொண்டு அதைவிடாமல் பார்க்கிறாள். குழந்தையின் அழுகையை அவள் பொறுக்கிறளில்லை.

265. தாயின் மார்பில் குழந்தை வாய்வைத்த உடனேயே பால் சுரந்து விடுகிறது. தாய், குழந்தை இருவருமே ஒருவரை ஒருவர் கொஞ்சியே விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்கிறார்கள். ஆனாலும் பாரம் தாயின் தலையில் தான்.

266. தாயின் உள்ளம் முழுவதும் குழந்தையே நிரம்பி

இருக்கிறான். அவளுக்குத் தன் உடல் கூட நினைவில் இருப்பதில்லை. குழந்தையைத் தூக்கிய உடனேயே அவள் களைப்பெல்லாம் தொலைந்து விடுகிறது.

267. குழந்தையின் மழலை தாய்க்கு அமுதம் போல். உடனே அவனைத் தூக்கி மார்புடன் அணைத்து வாயில் முத்தமிடுகிறாள். பகவானிடம் அன்பு செய்கின்றவனுக்கும், பகவான் அவ்விதமே. பக்தன் செய்வதெல்லாமே பகவானுக்கு இன்பம். அவன் விருப்பத்தையெல்லாம் பகவான் பூர்த்தி செய்கிறார்.

268. பசு காட்டிற்கு மேயப் போகிறது. ஆனால் மனதோ கொட்டிலில் கட்டப்பட்டிருக்கும் கன்றையே எண்ணி இருக்கிறது. என் தாயே! என்னையும் அவ்விதமே உன் பாதங்களில் வைத்துக் காப்பாற்று.

269. உண்மையாய்ச் சொல்கிறேன். ஸம்ஸாரம் துக்கங்களின் இருப்பிடம். பிறப்பு, மரணம் என்ற இரண்டு மிகப்பெரும் துயர்களின் இடையே உழன்று கொண்டிருக்கின்ற இந்த உலகில் எவன் வருகிறானோ, அவன் துக்கங்களின் விருந்தாளி.

270. ஸம்ஸாரம் துக்கமயம். துக்கமே அதன் உருவம். சாஸ்திரம் சொல்வதும் அதுதான். ஜீவனின் முடிவான அனுபவமும் அதுதான்.

271. பகவானின் கருத்துப்படிதான் படைப்பின் எல்லா வியாபாரங்களும் நடக்கின்றன. சாதாரண ஜீவன் இந்த உலகத் துயரங்களாகிற இயந்திரத்தில் அரைக்கப்படுகிறான். ஆனால் அதே துயர்கள் பாக்கியமுள்ள மனிதர்களுக்குக் கரையேற ஸாதனங்களாகின்றன.

272. உண்மையான அன்பு ஒருபொழுதும் மரணம் அடைவதில்லை. காலனும் (யமனும்) அதைக் கவர முடியாது.

273. அன்பு காமம் அற்றது. பயன் கருதாதது. அதற்குரியவன் பரமாத்மா ஒருவனே. அப்படிப்பட்ட அன்பு பக்தனின் பாக்யத்தால் கிடைக்கும்.

274. பக்தர்களிடம் உண்மை உண்டு. வைராக்யம் என்கின்ற கண் இமையினால் கண்கள் திறக்கின்றன. அப்பொழுது இந்த அழியும் உலகத்தின் பேதபாவங்களில் பகிர்ந்து வைத்திருக்கிற அன்பையெல்லாம் சேர்த்து ஒரு பரமாத்மாவிற்கு அர்ப்பணம் செய்துவிடுகிறார்கள். பிறகு பிரேம அமுதத்தின் தாரை பகவானை நோக்கிப் பாய ஆரம்பித்து விடுகிறது.

275. எல்லோருக்கும் உயிர்த்தோழனான ப்ரபு எதைச் செய்கிறானோ, அதில் தான் நமக்கு மேலான நன்மை கிடைக்கிறது.

276. பகவான் பக்தனைக் குடும்ப சிக்கலை ஏற்படுத்திக் கொள்ளவிடுவதேயில்லை. எல்லாத் தொல்லைகளிலிருந்தும் அவனைப் பிரித்தே வைத்திருக்கிறார்.

277. எவ்வளவோ அலைந்தேன், எல்லாம் கொள்ளை போயிற்று. தவிப்பிலேயே காலம் போகிறது. ஏன்? தீனதயாளா? உலகில் உன்னுடைய (ஏழைகளின் துணைவன் என்ற) இந்தப் பெயரைக் காப்பாற்றிக் கொள்.

278. இந்த ஸம்ஸாரம் ஸாரமற்றது. இங்கு எம்பெருமான் ஒருவரே ஸாரம்.

279. ஸம்ஸாரம் காலத்தின் பிடியில் அகப்பட்டது. அழியக் கூடியது. துக்கமே உருவானது. இதன் ஆர்ப்பாட்டங்கள் அனைத்தும் வீண். பகவான் கிடைத்துவிட்டால் ஜன்மம் ஸபலமாகிவிடும்.

280. இது எல்லாமே அழிவதுதான். கோபாலனை நினை. அதுதான் இதம்(நன்மை).

281. ஸுகத்தைப் பார்த்தால் கடுகளவு துக்கமோ மலையளவு.

282. இந்த உலகம் துக்கத்தால் கட்டப்பட்டிருக்கிறது. இதில் ஸுகத்திற்கு கருத்து எங்கேயும் கிடையாது.

283. உடல் அழிவதே, உடல் மரணத்தின் துருத்தி, இந்த துக்கமே உருவான உலகில் உறவினர்கள் தான் ஸுகத்தின் நண்பர்கள்.

284. ஸம்ஸாரம் பொய்யானது. இது தெரிந்தால் கண்கள் திறந்தன என்று பொருள். துக்கம்தான் கண்களைத் திறக்கிறது. அதுதான் அநுக்கிரஹம்.

285. மூட்டைப்பூச்சி நிறைந்த கட்டிலில் ஆழ்ந்த தூக்கம் கிடைக்காத ஒன்று. அப்படியே அநித்யமான இந்த உலகை நம்பி ஸுகம் பெறுவது நடக்காத ஒன்று.

286. வைராக்யம் பரமார்த்தத்தின் அடிப்படை.

287. விரக்தியில்லாமல் ஞானம் தங்காது. உடல் உள்பட, பார்வைக்கு வரும். அவ்வளவு உலகின் மேலும் 'அழிவு' என்கிற முத்திரை சித்தத்தில் ஏற்படாத வரையில் ஞானம் நிலையாது.

288. இந்த ஸம்ஸாரம் பூராவுமே அநித்தியம் தான். இந்த அநித்தியத்தை அறிந்த உடனே வைராக்யம் கையைக் கட்டிக் கொண்டு பின்னால் வரும். இந்த வைராக்யம் திடம் அடைவதுதான் பகவானின் அருள்.

289. வைராக்யம் விளையாட்டுப் பொருளல்ல. தெய்வத்தின் தயவு இருந்தால் தான் அது கிடைக்கும்.

290. பகவான் யாருக்கு அனுக்கிரஹம் செய்ய விரும்புகிறாரோ, அவனுக்கு முதலில் வைராக்யத்தை அருள் கிறான்.

291. சித்தத்திலிருந்த பிரபஞ்சம் (உலகியல் விவகாரம்) முழுமையாக ஒதுங்காத வரையில் பரமார்த்தம் தெரியாது. அது பிடிக்காது. அது தங்கவும் தங்காது. மனம் என்கிற நிலம் வைராக்யத்தால் சுத்தம் அடைந்த பிறகு தான் அதில் விதைக்கும் ஞானவிதை முளைத்து எழும்.

292. எப்பொழுதும் நல்லோர் இணக்கம். நல்ல சாஸ்திரங்களைப் படித்தல், குருவின் அருள். ஆத்மஞானிகளின் தொடர்பு இதுதான் ஜீவன் உலகத்தின் கோலகலத்திலிருந்து விடுபடுவதற்கு வழிமுறையாகும்.

293. ப்ராப்தத்தின் காரணமாக எந்த ஜாதியில் பிறந்தோமோ, அந்த ஜாதியிலிருந்து கொண்டே அதற்குரிய கருமங்களைச் செய்து கொண்டே பக்தியுடன் நாராயணனை வழிபடுவோம். கரையேறுவோம். இதுவே நம் கடமை.

294. பகவானை வழிபடுதலே வாழ்க்கையின் நற்பயன்.

295. சுலபமான வழியில் செல். ஸுகமாக ராமன், க்ருஷ்ணன், ஹரியின் பெயரைச் சொல்லிக் கொண்டு போ. இதுவே வைகுண்டத்திற்குச் செல்கின்ற எளிய வழியாகும்.

296. யாருடைய சேர்க்கையினால் பகவத் பக்தி உதயமாகிறதோ, அதுவே ஸத்ஸங்கம். மற்றதெல்லாம் நரகம்.

297. அடியார்களுடைய வீட்டு வாயிலில் நாயாகிக் கிடப்பதும் பெரிய பாக்யமே. அங்கே பகவான் திருப்பெயரைக் கேட்கலாம். பிரசாதம் பெறலாம்.

298. கீர்த்தனை செய்ய யாருக்கும் உரிமையுண்டு. வருணம் ஆசிரமம் என்கிற பேத பாவங்கள் கிடையாது.

299. கீர்த்தனம் செய்வதால் உடலே ஹரியின் உருவமாகி விடுகிறது. பக்திப்பாடல்களைப் பாடிக் கொண்டு ஆடு, கூத்தாடு. இதனால் உடல் என்கிற எண்ணம் போய்விடும்.

300. ஹரிகீர்த்தனத்தில், பகவான், பக்தன் பெயர் மூன்றும் திரிவேணி சங்கமம் ஆகிவிடுகின்றன.

301. அன்புள்ள பக்தன் அன்புடன் எங்கே ஹரியின் குணங்களைப் பாடுகிறானோ, பகவான் அங்கேயே இருக்கிறார்.

302. கீர்த்தனத்தினால் உலகியல் துக்கம் தொலைந்து விடுகிறது. கீர்த்தனம் ஸம்ஸாரத்தின் நாலாபக்கத்திலும் மதிலை எழுப்பி உள்ளே பெரும் ஸுகத்தை நிரப்பிவிடுகிறது. கீர்த்தனத்தினால் உலகமே தூய்மைநிற்கிறது. ஸ்ரீ வைகுண்டம் தரைக்கு வந்துவிடுகிறது.

303. பகவானுடைய அருளுரை, "என் பக்தர்கள் எங்கே பக்தியுடன் என் நாம ஸங்கீர்த்தனத்தைச் செய்கின்றார்களோ, அங்கே நான் கண்டிப்பாயிருக்கிறேன். வேறு எங்கு என்னைக் காண முடியாவிட்டாலும் என்னை அங்கு தேடு".

304. உன்னுடைய கீர்த்தனத்தை விட்டுவிட்டு வேறு ஒரு வேலையும் செய்யமாட்டேன். வெட்கத்தை விட்டு உன்னில் இணைந்து கூத்தாடுவேன்.

305. கீர்த்தனத்தை விலை பேசுவது மிகப்பெரிய மூடத்தனம்.

306. ஹரியினுடைய விக்கிரஹம், ஹரியிடம் அன்பு இவை இதயத்தில் வந்து தங்கக்கூடிய பேச்சாகப் பேசு. வைராக்யத்தின் ஸாதனைகளைச் சொல். பக்தி, அன்பு இவற்றைத் தவிர மற்ற எந்த வீண் பேச்சும் பேசாதே.

307. கீர்த்தனம் செய்யும்பொழுது மனதை திறந்து கீர்த்தனம் செய். ஒளிவு, மறைவு வைக்காதே. கீர்த்தனம் செய்யக் கிளம்பி விட்டு உடலை அசைக்க வெட்கப்படுபவன் எவனோ, அவனைப் போன்ற அசடன் யார் இருக்க முடியும்?

308. உன் பொய்வேஷத்தினால் இதயத்திலுள்ள நாராயணன் ஏமாற மாட்டார். புனித பாவனையே ஸாதனையாகின்ற தோட்டத்திற்கு வசந்தமாகும்.

309. பகவான் பாவனை கொள்கின்றவனுடைய கைக்குக் கிட்டிவிடுகிறான். தன்னை அறிவாளியாக எண்ணுகின்றவன் இறந்தும் கூட பகவானின் இருப்பிடத்தை அறிந்து கொள்ள மாட்டான்.

310. ஞானக்கண்கள் திறந்தால் கிரந்தங்களின் (நல்ல நூல்கள்) அர்த்தம் புரியும். மறைந்த பொருள் வெளியாகும். ஆனால் பாவனையில்லாத இடத்தில் ஞானம் கிட்டாது. (பாவனை அல்லது பாவம் - மெய் உணர்வு)

311. பாவனையில் கண்கள் விழித்த இடத்திலேயே இந்த உலகமே தனி அழகு கொண்டதாகக் காணப்படுகிறது.

312. பகவானுடன் சந்திப்பு ஏற்படுவதற்கு உணர்ச்சி அவசியம்.

313. சித்தம் தெய்வச் சிந்தனையின் நிறம் கொண்டுவிட்டால் சித்தமே சைதன்யம் ஆகிவிடும். ஆனால் சித்தத்தில் உண்மை யிருக்க வேண்டும்.

314. எப்படி எண்ணமோ அப்படியே பயன். ஈச்வரனிடத்தில் வேறு எந்த வழியும் பயன் தராது.

315. படியும் கல்தான், தெய்வ விக்கிரஹமும் கல் தான். ஒன்றின் மேல் காலை வைக்கிறோம். மற்றொன்றின் காலில் விழுகிறோம். பாவனையால் தான் பகவான்.

316. கங்கை நீர் வெறும் நீரல்ல. அரச மரம் வெறும் மரமல்ல. துளஸியும், ருத்ராக்ஷமும் வெறும் மாலையல்ல. இவையெல்லாம் ஈச்வரனின் சிரேஷ்டமான தேஹங்கள்.

317. பாவனையில்லையென்றால் சாதனைக்குப் பொருளில்லை.

318. தீர்த்தத்தை (புனிதமான ஆறு, குளம், கடல் இவற்றின் நீரை) யார் வெறும் நீர் என்று நினைக்கிறானோ, விக்கிரஹத்தை எவன் கல்லாக காண்கிறானோ, அடியார்களை மனிதர்களாக எண்ணுகிறானோ அவனைப் போன்ற அறிவிலி யாரும் இல்லை.

319. ஒவ்வொரு ''பூதத்திலும்''(தோற்றம் கொண்ட பொருள்) ஹரியின் தரிசனம் கிடைக்கத் தொடங்கிவிட்டால் அப்போது தான் நிஷ்காமமான உண்மை பூதசேவை ஏற்பட முடியும்.

320. நீ பகவானை விரும்பினால் உணர்ச்சி வேகத்துடன் அவர்பாட்டைப் பாடு, மற்றவர்கள் குண, தோஷங்களை கேட்காதே, நினைக்காதே, ஸாதுக்களின் பாதங்களில் சேவை செய். எல்லோரிடமும் பணிவாக இரு, முடிந்த அளவு உதவு, இதுவே சுலபமான உபாயம்.

321. பிறருக்குச் செய்யும் உபகாரம் ஹரிக்குச் செய்யும்

தொண்டு. உயிரினங்களுக்குச் செய்யும் உபகாரம் அவற்றுள் உறையும் பரம்பொருளுக்குச் செய்யும் வழி பாடாகும்.

322. நம் இதயத்தின் உணர்ச்சியை தெய்வம் தானே அறியும், அவருக்குச் சொல்ல வேண்டியதில்லை.

323. சிறியவர், பெரியவர் எல்லோருடைய உடலுமே நாராயணனின் உடலாகும்.

324. சித்தத்தில் எம்பெருமானை அமர்த்திக் கொண்டால் அந்தக் கணமே மற்றவரது பொருளும், மற்ற பெண்ணும் நஞ்சாகிவிடும்.

325. வெட்கத்தை விட்டு பெயரை எண்ணுவதே எண்ணுடைய முழுச்சொத்து. இதுவே என்னுடைய சம்பூர்ண சாதனை.

326. என் சித்தம், சொத்து, புண்ணியம், புருஷார்த்தம் எல்லாமே ஸ்ரீ ஹரி தான்.

327. எனக்கு தாய், தந்தை, அண்ணன், தங்கை எல்லாம் ஸ்ரீ ஹரி ஹரியை விட்டால் குலமும், கோத்திரமும் எனக்கு எதற்காகும்? ஹரியே எனக்கு எல்லாம் இந்த பிரம்மாண்டத்திலும் வேறு ஏதும் கிடையாது.

328. இந்த ஸம்ஸாரத்தில் சுற்றிச் சுழன்று நான் களைத்து விட்டேன். தெய்வத்தின் திருநாமம் தான் எனக்கு குளிர்ச்சி தந்தது.

329. ராமன், க்ருஷ்ணன், ஹரி என்று கீர்த்தனம் செய். நீ நல்லவனாயிரு அல்லது கெட்டவனாயிரு. ஆனால் ஹரியின் கதையைச் சொல். நான் சபதம் செய்து சொல்கிறேன், இதனால் நீ கரையேறி விடுவாய்.

330. நம்பிக்கையை இழக்காதே. 'நான் பதிதன் (வீழ்ச்சி அடைந்தவன்). நான் எப்படி கரையேறுவேன் என்றெல்லாம் சொல்லாதே. வேறு எங்கும், எதையும் பார்க்காதே. ஸ்ரீ ஹரியின் பாட்டைப்பாடு. அவர் பாதங்களைப் பிடித்துக் கொள். அவருடைய துணையை விட்டு விடாதே'.

331. ஹரி கதையில் ஏற்படுவது ஸுகமான ஸமாதி.

332. ராமன், க்ருஷ்ணன், ஹரி, நாராயணன் - போதுமே இதைவிட வேறு என்ன வேண்டும்?

333. வாசனையின் (ஆசையைத் தூண்டுகின்ற மனப் போக்கு) வேரை அறுக்காமல் நான் கரையேறிவிட்டேன் என்று ஒருவரும் சொல்ல வேண்டாம்.

334. அமுதத்திற்கு விதை - ஆத்ம தத்துவத்தின் ஸாரம் ரஹஸ்யத்திற்குள்ளெல்லாம் ரஹஸ்யம் ஸ்ரீ ராம நாமமே.

335. லோபம், மோஹம், ஆசை, த்ருஷ்ணை (தீவிர ஆசை), மாயை இவையெல்லாம் ஹரி குண கானத்தினால் பறந்தோடிவிடும்.

336. பக்தர்களுடன் சேர். சொத்து ஆசையெல்லாம் மாயையின் பாசங்கள். இந்த வலையிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்.

337. ஞானியாக வேஷம் போடுகின்றவர்களுடைய வஞ்சனை வழியில் விழுந்து விடாதே. அவர்கள் நிந்தை, அஹங்காரம், வாதம், விவாதம் இவற்றில் சிக்கியவர்கள் பகவானிடத்திலிருந்து விலகியவர்கள்.

338. ஸாதுக்களுடன் சேர். ஸத்ஸங்கத்தினால் பிரேமையும், ஸுகமும் அடை.

339. ஸாதகனின் நிலை விருப்பு, வெறுப்பற்றதாக இருக்க வேண்டும். இது 'உதாச குணம்'. எவனுக்கு வெளியேயும், உள்ளேயும் ஒரு பட்டப் பெயரும் கிடையாதோ, நாக்கு ஆசையற்றதாக இருக்குமோ, உணவு, தூக்கம் இவற்றில் கட்டுப்பாடு இருக்குமோ, பெண்கள் விஷயத்தில் தவறாதவனாயிருப்பானோ, அவனை உதாசி (ஒட்டாதவன்) என்று சொல்கின்றோம்.

340. ஏகாந்தத்திலோ அல்லது மக்கள் மத்தியிலோ உயிருக்கே ஆபத்து வந்தாலும், சிற்றின்ப ஆசையிலிருந்தும், அதன் தூண்டுதல்களிலிருந்தும் ஒதுங்கியிரு.

341. நல்லவர்கள் இணக்கம், நாமத்தின் உச்சாரணம், கீர்த்தனம் இவற்றை இரவும், பகலும் செய்து கொண்டிரு. ஹரியின் பஜனையில் இன்பம் காண்.

342. ஸதாசாரத்தில் (நல்ல நடத்தையில்) குறைகளுடன் தெய்வ பக்தர்கள் கூட்டத்தில் பஜனை மட்டும் செய்தால், அந்த பஜனை சல்லிக்காசுக்குப் பயன்படாது. அவ்விதமே நடத்தையில் நல்லவன் பஜனை செய்யாதிருப்பவனும் அரை மனிதன்தான்.

343. ஆசாரங்களை ஒழுங்காகக் காப்பாற்று. ஹரியை பஜனை செய். இவ்விதம் செய்பவனுக்குத் தான் குருவின் அருளால் ஞானம் கிடைக்கும்.

344. தனித்திருத்தல், கங்கை ஸ்நானம், தெய்வத்திற்கு பூஜை செய்தல், துளஸியை வலம் வருதல் இவற்றை



நியமமாகச் செய்து கொண்டு ஹரியைப் பற்றிய சிந்தனையில் நேரத்தைக் கழிக்க வேண்டும்.

345. உடலை பகவானுக்கு அர்ப்பணம் செய். பரமார்த்தத்தைப் பெறுவதுதான் மிகப்பெரிய சொத்து. இதை அறிந்து பகவானுடைய பாதங்களைப் பற்றுவாயாக.

346. பழித்துப் பேசுவதையும், வீண் வாதத்தையும் எப்பொழுதும் ஒதுக்கி வைத்திருப்பாய்.

347. கலியுகத்தில் கீர்த்தனம் போதும், நாராயணன் தரிசனம் கொடுப்பார்.

348. எந்த வீட்டு வாசலில் துளஸியில்லையோ, அந்த வீட்டை மயானம்போல் கருது.

349. அயற்பெண் தாய்க்குச் சமானமாக எண்ணப்படட்டும். பிறர் சொத்துக்கு ஆசையும், பிறரைப் பழிப்பதையும் விட்டுவிடு. ராமநாமம் சிந்திக்கப்படட்டும். அருளாளர்களின் அருளுரைகளில் நம்பிக்கையிருக்கட்டும். உண்மை போற்றப்படட்டும். இந்த உபாயங்களால் பகவான் கிடைக்கிறார். வேறு முயற்சிகள் தேவையில்லை.

350. தலையைத் தாழ்த்து, ஸாதுக்களின் பாதங்களில் வீழ். மற்றவர் குற்றங்களைக் கேட்காதே. நினைக்கவும் நினைக்காதே. சக்தியுள்ள அளவு உபகாரம் செய்து கொண்டிரு. இது சுலபமான வழியாகும்.

351. எங்கே ஆசை மடிகிறதோ, அங்கு பகவான் இருக்கிறார். ஆசையை வேருடன் களைந்து ஏறி, (ஆசை என்பது விருப்பம், பற்று இரண்டையும் குறிக்கும்)

352. சித்தத்தை, சுத்தமாக்கி உள்ளூர பகவானின் பாட்டைப்பாடு.

353. மற்றவரிடம் நல்லபேர் வாங்குவதற்காக பரமார்த்த ஸாதனை (பக்தி) செய்யாதே. பகவானை அடைய விரும்பினால் மட்டும் பகவானைத் துதி.

354. பகவானிடத்தில் ஈடுபாடிருந்தால் இது உடல் என்கின்ற எண்ணத்தை சூனியமாக்கிவிட்டு பகவானைத் துதி.

355. யாருக்கு எந்த வழி சரியோ அதை ஈச்வரன் காட்டி விடுவான். அவன் பேரருளாளன்.

356. கண்களால் கரிய கண்ணனைப் பார். அவரிடத்தில் நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், பதினெட்டு

புராணங்கள் அவ்வளவும் ஒன்றாகியிருக்கின்றன. ஒருகணம் கூட கெட்ட வனுடன் சேராதே. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை ஜபம் செய்து கொண்டிரு.

357. உன்னுடைய இதயத்தை ஸ்ரீ ஹரிக்குக் கொடுத்துவிடு. அது வெண்ணெய்போல உருகிவிடும்.

358. எண்ணத்தில் சுத்தம் ஏற்பட்டால் இதயத்தில் ஸ்ரீ ஹரி வருவான். அவன் உருவம் தோன்றிவிடும்.

359. ஸ்ரீ ஹரியின் ஸகுண பக்தி ஜீவனுக்கு எளிதான உபாஸனையாகும். இந்த ஸகுணத்தை கண்ணெதிரே அடைவதற்கு முக்கிய சாதனம் ஹரி நாமஸ்மரணமாகும். சாஷாத்காரம் ஆன பிறகும் நாமஸ்மரணம் தான் நமக்கு கதி.

360. பெயரைச் சொல்லியே ஹரியைப் பெறு. ஹரி கிடைத்த பிறகும் நாமஸ்மரணம் செய். விதையும் அவன் பெயர்தான். பழமும் அவன் பெயர்தான்.

361. இந்த உலக விவகராம் அனைத்தையும் ப்ராரப்தத்தின் தலையில் எறிந்துவிட்டு ஹரியேத் தேடுவதில் முனை.

362. தினம் தோறும் ஹரியைத் துதிப்பவனே உண்மையான பண்டிதன். இந்த உவகம் முழுவதும் ஹரியே திளைக்கிறான் என்று அவன் அறிவான்.

363. வேதங்களின் பொருள், ஸாஸ்திரங்கள் காட்டும் ஞானம், புராணங்களின் சித்தாந்தம் ஆகிய அனைத்தும் ஒன்றுதான், அது அனைத்து வகையாலும் பரமாத்மாவின் பாதங்களைப் பற்று, நிஷ்டையுடன் அவன் பெயரையே பாடு. எல்லா ஸாஸ்திரக் கருத்துக்களுக்கும் இதுவே எல்லை நிலம்.

364. பகவத் பக்தியில்லாத அந்தப் பெருமையை நெருப்பு பொசுக்காட்டும்.

365. வேரில் நீர் ஊற்றினால் மரமே நனையும், ஸந்தேஷக் குழப்பத்தில் ஈடுபடாதே. எது சாரமே அதைப் பிடித்துக் கொள்.

366. பதிவ்ரதைக்கு பதி எப்படி பிரமாணமோ அப்படியே நமக்கு நா்ராயணனாகும்.

367. விதையைப் பொரித்து பொரியாக்கிவிட்டோம். இனி பிறப்பேது? சாவு எங்கே?

368. ஸ்ரீ ராமச்சந்திரன் மனதில் இருக்கிறார், ஜீவன் வெளிப்பொருள்களில் ஆசை கொண்டு அவலப்படுகிறது.

369. தனக்கென்று ஒரு விருப்பம் கொள்ளாதே. தெய்வத்தின் விருப்பத்திற்கேற்றவாறு நடந்து கொள். தோட்டக்காரன் ஜலத்தைப் பாய்ச்சும் இடமெல்லாம் ஜலம் அமைதியாகச் செல்கிறது. அப்படியே நீயும் ஆகிவிடுவாய்.

370. தணலின் மேல் ஸுகத் தூக்கமா? இந்த துக்கம் நிறைந்த உலகில் ஸுகத்தைத் தேடுவதா?

371. இந்த உலகில் நாம் யமனின் உணவு. யார் ஸுகமடைய முடியும்?

372. எவ்வளவு மண்டையை உடைத்துக் கொண்டாலும் சர்க்கரை கரும்பாகாது. அவ்விதமே தெய்வத்தைப் பிடித்துவிட்டால் பிறப்பு, இறப்பு என்கின்ற வட்டத்தில் சிக்க வேண்டாம்.

373. இந்த ஜீவாத்மா தன்னைத்தானே காக்கும். தன்னைத் தானே அழிக்கவும் அழிக்கும். நாம் தான் நம்மை உயர்த்திக் கொள்ள வேண்டும். என்றும் விடுபட்டு நிற்கும் ஆத்மாவே! எங்கே போய் சிக்கிக் கொண்டாய்! நீயே யோசி!

374. மறைந்தது, தோன்றியது எல்லாம் ஐயமின்றி நீயே! (கடவுளே), பக்தியினால் வெளிப்பட நிற்கிறாய். யோகத்தில் மறைந்து நிற்கிறாய்.

375. யார் எப்படி த்யானம் செய்கிறானோ, கருணையுள்ள கடவுள் அவ்விதமே ஆகிவிடுகின்றன.

376. நான் துதித்தால் வேதத்தாலும் செய்ய முடியாததை நான் செய்ய முடியும். ஆனால் இந்த அசட்டு நாக்குக்கு வேறு ஸுகத்தில் அல்லவா ருசி ஏற்பட்டு விட்டது! என்ன செய்வது?

377. என்னுடைய பங்குக்கு என்ன வேலை வந்ததோ அதைச் செய்கிறேன். என் மனம் உன்னுள்ளே இருக்கட்டும்.

இந்த உடல் அதன் தர்மத்தைக் காப்பாற்றட்டும். ஆனால் நெஞ்சே! நீ உள்ளேயிருக்கும் வித்தையை மறக்காதே.

378. எங்கேயும் எனக்கு யாராலும் ஒன்றும் ஆகவேண்டாம்: எனக்கு எங்கும் நீயேதான். உடல், வாக்கு, மனம் எல்லாவற்றையும் உன் பாதங்களில் வைத்துவிட்டேன். பகவானே! என்னிடம் எதுவும் மிச்சம் இல்லை.

379. நீரில்லாத இடத்தில் துடிக்கும் மீன்போல் எனக்கும் ஆத்ம போதத்திற்காக துடிப்பு ஏற்படட்டும்.

380. விளையாட்டில் சொக்கட்டான் காய் ஆடுவதும், வெட்டுவதும் எப்படியோ, ஞானியின் பார்வையில் ஜீவனின் வாழ்வும், மோக்ஷமும் அப்படியேதான்.

381. வாயில் அகண்ட நாராயண நாமமே முக்திக்கும் மேற்பட்ட பக்தி என்று அறிந்து கொள்.

382. இந்த உடல் நல்லதுமல்ல. கெட்டதுமல்ல. உடனே இதை ஹரி பஜனையில் ஈடுபடுத்து.

383. ராமன் பெயரைச் சொல்லாத வாய் வெற்று தோல் குழி. அதற்குள் இருக்கும் நாக்கு வெறும் தோல் துண்டு.

384. ஹரியின் மகிமையைப் பாடு. மனிதனைப் பாடாதே.

385. தெய்வத்தை எண்ண நேரம் ஆவதில்லை. காசு கொடுக்க வேண்டியதில்லை. எப்பொழுதும் ராம, 'க்ருஷ்ணா' ஹரி கோவிந்த'' என்ற பெயர்கள் நாவிலிருக்கட்டும். இதுவே ஸத்தியமான ஸாரம். புலமையின் சுமை வீண்.

386. கதை சொல்லி கீர்த்தனம் பாடி பணம் கொடுப்பவர்களும், வாங்குபவர்களும் அசட்டுத்தனம் செய்கிறார்கள்.

387. உயிருள்ளவரை பகவான் பெயரைச் சொல். கீதை, பாகவதம் கேள். ஹரிஹர மூர்த்தியை த்யானி.

388. கர்மம், அகர்மம் என்ற குழப்பத்தில் ஈடுபடாதே. ரஹஸ்யத்தைச் சொல்கிறேன் கேள். அட்டஹாசமாக ராமன் பெயரை உச்சாரணம் செய்.

389. ஆசைக்கு அடிமைப்பட்டு வாழ்கின்ற ஜீவன் அதமன். அவனைப் பார்ப்பதே அபசகுனம்.

390. விஷய த்ருஷ்ணைக்கு (சிற்றின்பங்களுக்காக) யார் அடிமை ஆகின்றானோ, அதற்கென்றே ஆடுகிறானோ அவன் குரங்காட்டியின் குரங்கைப்போல.

391. ஹரிக்கும், ஹரனுக்கும் ஒன்றும் பேதமில்லை. பொய்யாக வாதம் புரியாதோ. இரணடு பேரும், சர்க்கரைக்குள் இனிப்பும், இனிப்புக்குள் சர்க்கரையும்போல ஒருவர் மற்றொருவர் உள்ளத்தில் இருக்கின்றனர்.

392. பகவான் முன்னும் பின்னும் நின்று கொண்டு உலகின் கஷ்டத்தை நீக்குகிறார்.

393. இரண்டே எழுத்துக்கள் தான். ராம என்ற பெயரைச் சொல்.

394. குளவி எவ்வளவு கடினமான மரத்தையும் பாடிக் கொண்டே துளைத்து விடுகிறது. ஆனால் மிருதுவான தாமரை மொட்டுக்குள் வந்தால் சிக்கிவிடுகிறது. உள்ளிருந்து உயிரை விட்டாலும் விடும். ஆனால் தாமரை இதழைக் கிழிக்காது. அன்பும், மிருதுமாக இருப்பதால் இவ்வளவு கடினமாகி விடுகிறது.

395. குழந்தை தந்தையைப் பிடித்துவிட்டால் தந்தை அங்கேயே நின்றுவிடுகிறார். குழந்தையைத் தள்ளிவிட்டு போகாததற்குக் காரணம் பலக்குறைவல்ல. அன்பின் பிடியில் சிக்குண்டு நிற்கிறார். இதுவே அன்பின் விசித்திர முறை ஆகும்.

396. ஹரிக்கு எது பிடிக்காதோ அந்த ஞானம் பொய், அந்த த்யானம் பொய்.

397. ஹே பகவானே! என்னுடைய மனதை உன் வசமாக்கி செலவில்லாமல் சுவாமியாகும். பெருமையை அடைய ஏன் தாமதிக்கிறாய்?

398. ஒரு பணக்காரனின் பையன் உதவியற்றுத் துக்கப் பட்டால், கடவுளே! மக்கள் யாரை எள்ளி நகையாடுவார்கள்? பையனிடம் குணமில்லை, சுத்தமாய் இருக்க அறியமாட்டான் என்றாலும் அவனைச் சீராட்டி வளர்த்தே ஆக வேண்டும். அப்படித்தான் நான் பாமரன். ஆனால் என் மேல் உன் முத்திரை யிருக்கிறது. இதை நினைவில் கொள்.

399. ஸாதுக்களின் லக்ஷணம் என்ன? பிராணிகளிடத்தில் இரக்கம் காட்டுதல்.

400. பகவான் பக்தனைத் தனக்கு உபகாரம் செய்பவனாக மதிக்கிறார். அவனுக்குக் கடனாளியாகத் தன்னை எண்ணுகிறார்.

401. ஹரியின் பக்தர்களை யாரும் நிந்திக்க வேண்டாம். கோவிந்தன் அதைப் பொறுக்கமாட்டார். பகவான் தனக்குச் செய்யும் நிந்தையைப் பொறுத்துக் கொள்வார். ஆனால் தன் அடியார்களுக்குச் செய்யும் அவமதிப்பைத் தாங்க மாட்டார். அவரது இதயம் அவ்வளவு மென்மையானது.

402. பக்தன் கூப்பிடுவதில் தான் தாமதம். பகவான் வருவதில் தாமதம் ஏற்படாது. எனவே ஏ மனமே! விரைபடுத்து.

403. உட்காரும் போதும், எழுந்திருக்கும் போதும் பகவானை அழை. அழைத்தால் அவர் உடன் வருவார்.

404. பகவான் தன் பக்தனை முன்னும் பின்னும் இருந்து பாதுகாக்கிறார். அவனை யாராவது தாக்கினால் அவர் தடுக்கிறார். அவனுடைய யோக க்ஷேமத்தின் எல்லா சுமையையும் அவர் தானே ஏற்றுக் கொள்கிறார். கையைப் பிடித்து வழிகாட்டுகிறார்.

405. பகவான் யாரைத் தன்னவன் ஆக்கிக் கொண்டாரோ, அவன் நிந்தைக்குரியவனாயிருந்தாலும் வந்தனைக்குரியவனாகி விடுகிறான்.

406. பக்தியில்லாத வாழ்வை நெருப்பில் போடு. உள்ளே ஹரியிடம் அன்பு இல்லாவிட்டால் குலம், சாதி, வர்ணம், ரூபம், படிப்பு என்ன இருந்தால் என்ன? இவற்றால் வீண்கர்வம் தான் வளரும்.

407. பகவானுக்கு எது பிடிக்குமோ அதுவே சுபம். பாராட்டுக்குரியது. உத்தமமானது. பகவானுடைய முத்திரை எதன் மேல் பதிந்திருக்குமோ அந்த நாணயம் தான் உலகில் செல்லக் கூடியது.

408. ஹரி சரணாகதியே, பாவம். புண்ணியங்களிலிருந்து விடுபட ஒரே வழி. சரணாகதி அடைந்தவர்களே கரையேறி னார்கள். பகவான் அவர்களைக் கரையேற்றும்பொழுது அவர் களின் குற்றம், குறைகளைப் பார்ப்பதில்லை. ஜாதியையோ, குலத்தையோ எண்ணுவதில்லை. அவர் உள்ளத்தின் உண்மை யையே பார்க்கிறார்.

409. அநந்ய பக்தி என்ற அன்பாகிய கங்கையில் எல்லா சுப, அசுப கருமங்களும் சுபமாகி விடுகின்றன.

410. உன்னுடைய பெயர் பிரகலாதனை நெருப்பிலிருந்து காப்பாற்றிற்று. நீரில் காப்பாற்றிற்று. நஞ்சை அமுதமாக்கிற்று. நாதனற்றவனுக்கு நீ நாதன். இதைக் கேள்விப்பட்டே. நான் உன் பாதங்களுக்கு வந்தேன்.

411. பகவான் ஒருகால் பக்தனின் தலையின் மேல் துக்கத்தின் மலையைச் சாய்த்துவிட்டாலும் குடும்பம், ஸுகம் அனைத்தையும் அழித்தே விட்டாலும் பக்தன் மேலும் ஆர்வம், உற்சாகம், எழுச்சி, பக்தி கொண்டு அவரை வழிபடுவான்.

412. பகவான் கிடைக்கின்ற வழியை உலகினர் மட்டம் என்று பழித்தாலும் நீ செய். பகவான் விலகும் படியான செயல். சுபம்போல காணப்பட்டாலும் அதைச் செய்யாதே.

413. பகவானை அடைய இன்றியமையாத ஸாதனம் பெயரை எண்ணுதலாகும். நாமஸ்மரணத்தினால் எண்ணற்ற பக்தர்கள் கரையேறினர்.

414. ஏ பகவானே! பக்தர்களுக்காக உன் இதயத்தில் பெரும் கருணையிருக்கிறது. எனக்கு அது இப்போது புரிந்துவிட்டது. ஹரி! உன்னுடைய இதயம் எவ்வளவு கோமளமானது. உனக்குத் தான் எல்லையற்ற தயை இருக்கிறது.

415. அன்பில் இருக்கும் துடிப்பு, ஏக்கம், அழுகை எல்லாம்

ஆழ்ந்த பிடிப்பின் வெளியீடுகள். அன்புக் கண்ணீர் வரப்ரஸாதம், துன்பக் கண்ணீர் சாபம்.

416. பகவான் கற்பகத் தரு. சிந்தாமணி. மனம் எண்ணுவதையெல்லாம் முழுமையாய்த் தரவல்லவர்.

417. குருவின் அனுக்கிரஹம் யாருக்குக் கிடைத்திருக்கிறதோ, குரு சேவையின் பரமானந்தத்தை எவன் அனுபவித்திருக்கிறானோ, அவனுக்குத் தான் இதன் இனிமை தெரியும்.

418. குரு கிருபையில்லாமல் எந்த ஸாதகனும் தன் செயலில் வெற்றி கண்டதில்லை. குருவின் பாத தூளிகளில் புரண்டு எழாமல் யாரும் பயன் பெற்றதில்லை. குருவே நடக்கின்ற பேசுகின்ற பிரம்மமாகும்.

419. ஸத்குரு சீடர்களின் கண்களில் ஞான மையைத் தடவிப் பார்வை அளிக்கிறார். இப்படிப்பட்ட ஸத்குரு நம்மிடம் ஆசையுடன் வரும்போது நல்ல பணிவு, உண்மையான நல்லெண்ணம், திடமான நம்பிக்கை இவற்றுடன் அவருடைய பாதங்களைப் பற்று. உன் இதயத்தை முழுமையாக அவருக்கு அர்ப்பணம் செய். உச்சநிலையில் அன்பு வை. கண்ணெதிரே வந்த பரமேச்வரனாகக் கொள். இதனால் பக்தி ஞானக் கடலையே அடைந்து விரும்பியதைச் செய்து முடித்தவனாவாய்.

420. ஸித்த புருஷர்களான மஹாத்மாக்கள், ஈச்வரனின் உருவங்கள், அவர்கள் சிரத்தை கொண்ட ஸாதகனை தொடுவதாலேயே, கருணை நோக்கினாலேயே, தாங்கள் விரும்பினவளவிலேயே கரையேற்றி அருளுவார்கள். மலைபோல் மண்டியிருக்கிற பாவச்சுமையை சுமந்து நிற்கும் ஜீவனைக் கூடத் தங்கள் தயவினால் அரைக்கணத்தில் புண்ணியாத்மாக்களாக ஆக்கிவிடுவார்கள்.

421. பகவானை அடைய விருப்பம் கொண்டிருக்கும் முமுக்ஷுக்களின் கண்களை குருவே திறக்கிறார்.

422. குரு சீடர்களுக்குள்ள ஸம்பந்தம், முன்னோர்களுக்கும்

அந்த குடும்பத்தில் பின் பிறந்தவர்களுக்கும் இருக்கின்ற உறவு போன்றது. சிரத்தை, பணிவு, சரணாகதி, மரியாதை இவைகளால் சீடன் குருவின் மனதை வசப்படுத்தினால் அவனுடைய ஆத்ம முன்னேற்றம் உறுதி.

423. ஸ்வானுபூதி (தன்னை உணர்தல்) ஞானத்தின் பரம எல்லை. அந்த அனுபூதி நூல்களிலிருந்து கிடைக்காது. அதை உலகம் சுற்றிப் பெறமுடியாது. குருவின் கிருபை இல்லாமல் முக்காலத்திலும் அதன் ரஹஸ்யம் புலப்படாது.

424. பகவானின் கிருபையினால் குரு தரிசனம் கொடுக்கும் பாக்கியம் உதயமானால் அப்பொழுது முழு உள்ளக் காரணங்களுடன் குருவின் பாதங்களைப் பற்று. அவருடைய குழந்தையாகவே ஆகி வேறு எண்ணம் இல்லாமல் அவருக்குத் தொண்டு செய். இதனால் நீ பெறும் பேறு அடைவாய்.

425. சான்றோர்கள் கிடைப்பது கடினம்தான். ஆனால் முற்றிலும் கிடைக்காத ஒன்றல்ல. சந்தனம் விலையுயர்ந்ததானாலும் சந்தையில் கிடைக்கும் பொருள் தானே!

426. நம்முடைய பாக்கியஸ்ரீ உதிக்கும் நேரம் வரும்பொழுது தான் ஸாதுக்கள் வருகிறார்கள்.

427. மோக்ஷத்தில் வேட்கை கொண்டவர்களுக்கு குருவைத் தேடிச் செல்லும் தேவை ஏற்படுவதில்லை. நற்கதி பெறத் தகுதி பெற்ற சீடர்களை குருவே தேடி வருகிறார்.

428. பழம் கனிந்துவிட்டால் கிளி அழைக்காமலேயே சென்று அதைக் கொத்துகிறது. அதேபோல் வைராக்யம் பெற்ற ஜீவனைக் கண்டவுடன், தயை கொண்ட குரு ஓடி வந்து அவனுக்கு ஆத்ம ரஹஸ்யத்தைச் சொல்லிக் கொடுத்து அவனை பயன் பெற்றவனாக்குகிறார்.

429. எல்லா சான்றோர்களுமே ஸத்குருவே! என்றிருந்தாலும் எல்லாப் பெண்களுமே தாய்மார்கள் போன்றவரே என்றாலும் பாலூட்டும் தாய் ஒருத்தியாகத் தான் இருக்கமுடியும். அதுபோல எல்லா ஸாதுக்களும் குருவுக்கு ஒப்பானவர்கள் என்றாலும், ஸ்பாவனுபவம் என்ற அமுதத்தைப்

பானம் செய்விக்கும் ஈச்வர நியதமான ஸத்குருவான தாயும் ஒருவர் தான் இருக்க முடியும். மோக்ஷ வேட்கை கொண்ட குழந்தை பசியினால் தவித்து அழும்போது ஸத்குருவாகிய தாய்க்கு ஒருகணம் கூட பொறுக்க முடியாது. ஓடி வருவாள். குழந்தைக்கு அமுதபானம் செய்விப்பாள்.



430. குரு ஈச்வரனால் அனுப்பப்படுகிறாள். குரு, சீடனின் உறவு பல பிறவிகளாக தொடர்ந்து வருகிறது. அப்படிப்பட்ட குரு குறிப்பிட்ட நேரத்தில், ஒரு சீடனை க்ருதார்த்தன்(பேறு பெற்றவனாக) ஆக்கி விடுகிறார்.

431. பூத தயை (உயிர்களிடத்தில் அன்பு) சான்றோர்களின் மூலதனம்.

432. நீ சாவியை வலது பக்கமாகச் சுற்றுகிறாய். இடது பக்கமாகச் சுற்று. பூட்டுத் திறக்கும். போகின்ற திசைக்கு முதுகைக் காட்டித் திரும்பு. முன்னால் பார்க்காதே. பின்னால்

பார். கண்களை வெளியே செலுத்துகிறாய். உள்ளே செலுத்து. வெள்ளத்துடன் ஓடாதே. புறப்படும் இடத்தைப் பார்த்துக் திரும்பு. நீ முக்தனாவாய், ஸுகம் பெறுவாய். ப்ரஹ்ம சொரூபமாகிவிடுவாய்.

433. யார் யாரைப் பிணைக்கிறார்கள்? யார் யாரை விடுவிக்கிறார்கள்? எல்லாம் ஸங்கல்பத்தின் மாயை.

434. மனது பாய்ந்தோடும் குதிரை. வைராக்யக் கடிவாளம் கொண்டு அதை அடக்கி வசப்படுத்த வேண்டும். வெற்றி பெறமுடியாத இந்த மனதின் மேல் ஏறி, எவன் அதைச் செலுத்துவானோ, அவன் பலவான்களுள் எல்லாம் பெரிய பலவான்.

435. மனதிடம் ஒரு நல்ல செயல் இருக்கிறது. எந்தப் பொருளுடன் அதற்குப் பழக்கமும், ருசியும் ஏற்பட்டுவிடுகிறதோ, அத்துடன் அது உழன்று திரியும். எனவே அதற்குத் தொடர்ந்து ஆத்மானுபவமாகிய இன்பத்தைக் கொடுத்து வா.

436. ஒரு புறம் வைராக்யத்தை ஏற்றுக் கொள். சித்தத்தைப் பொருட்களிலிருந்து ஒதுக்கி வை. மறுபுறம் ஹரியை எண்ணுகின்ற ஆனந்தத்தை அனுபவி. இவ்விதம் வைராக்யம், அப்யாஸம் என்ற இந்த இரண்டு அஸ்திரங்களையும் கொண்டு அடித்தால் மனக்கோட்டையைத் தகர்த்து விடமுடியும்.

437. மனம் பொருட்களில் அலுப்புக் காணவேண்டும். அவ்வளவு வைராக்யத்தை ஒருபுறம் கொண்டு மறுபுறம் பரமார்த்தத்தின் சுவையை ஊட்டி ஹரிபஜனையில் ஸமாதி பெற வேண்டும்.

438. மனதை, மனதாலேயே அடித்து, அடக்கி ஹரி பஜனையில் ஈடுபட்டுத்தி, ஹரியின் உருவத்தில் அதைக் கரைத்து மனதை மனதாக இருக்கவிடாமல் செய்வதே மன வெற்றியாகும்.

439. இந்த மனதிற்கு உத்தமமான ஒரு கதியுண்டு. இது பரமார்த்தத்தில் ஈடுபடத் தொடங்கினால் நான்கு வகை

முக்திகளையும் அடிமை கொண்டே நிற்கும். பரபிரம்மத்தைக் கட்டிக் கையில் வைத்துக் கொண்டுவிடும். மனதை வசப்படுத்துவதனால் இவ்வளவு பெரிய லாபம் கிடைக்கும்.

440. மனம்தான் உத்தம கதியையோ அல்லது அதோ கதியையோ கொடுக்கிறது. அது எல்லாவற்றிற்கும் தாய். மனதை விட்டால் வேறு ஸாதனம் கிடையாது. எனவே இதை அழுக்கு நீக்கி மகிழ்ச்சி உடையதாகச் செய்.

441. மனதை திருப்தி செய்கின்ற வழி அதை இன்பப் பொருட்களைத் தேடி ஓடும் பிரவாஹத்திலிருந்து இழுத்து ஹரிபஜனையாகிற நங்கூரத்தோடு கட்டிவிடுவது தான். மனதை மிகவும் காக்க வேண்டியிருக்கிறது. அது எங்கு எங்கு ஓடுகிறதோ, அங்கிருந்து மிகவும் கவனமாக இழுத்து வர வேண்டியிருக்கிறது.

442. தினமும் விழித்துக் கொண்டிருந்து இந்த மனதை சமாளிக்க வேண்டியிருக்கிறது. மதம் கொண்ட யானைபோல் அங்குசமில்லாமல் இது தன்னிடத்தில் கட்டுப்பட்டு இருப்பதில்லை.

443. ஒரு கணத்தில் ஐம்பது இடங்களுக்கு சுற்றி வந்துவிடுகின்ற இந்த மனதை தெய்வத்தின் அருள் இருந்தாலேயே தடுக்கமுடியும்.

444. இந்த மனது உலகப் பொருட்களையே நினைத்திருக்கிறது. ஏ பகவானே! உனக்கும், எனக்குமிடையே இது தான் பெரிய தடங்கல். நான் பஜனை, பூஜை செய்கிறேன். ஆனால் உள்ளிருந்து கொண்டு இந்த மனம் உலகையே நினைத்துக் கொண்டிருக்கிறது. ஹே நாராயணா! ஓடி வா! என் மனதில் நிரம்பிவிடு.

445. ஹே பகவானே! இந்த மனதினால் நான் மிகவும் நொந்து போகிறேன். மனதின் இந்த விகாரத்தை உன்னால் நிறுத்த முடியாதா?

446. ஒரு நாழிகை கூட, ஒருகணம் கூட ஸ்திரமாக இல்லாமல் இந்த மனம் அலைந்து கொண்டேயிருக்கிறது. ஹே

நாரயணா! நீ என்னை கவனிப்பாயாக! நான் ஏழை, வேகமாக என்னிடம் ஓடி வா!

447. இந்த மனதை மிகவும் அடக்கினால், அழுக்கி வைத்திருந்தால் அது அலுத்துக் கொள்கிறது. பிறகு எங்கேயோ பாய்ந்து விடுகிறது. இதற்கு பஜனையில் இஷ்டமில்லை. சரவணத்தில் இஷ்டமில்லை. பொருளைக் கண்டு அதன் பக்கம் ஓடி விடுகிறது. தூக்கத்திலும், விழிப்பிலும் இதை எவ்வளவுதான் அடக்கி வைப்பது. ஹே ஹரி! நீயே என்னைக் காப்பாற்று.

448. இந்த மனம் வருவதில்லை. இன்பப் பொருளில் பேராசை கொண்டிருக்கிறது. இதனை நான் காண்கிறேன். இந்தச் சிக்கலை நான் எப்படி அவிழ்ப்பேன்? ஏ தெய்வமே! என்னுடைய வலுவின்மை உனக்குத் தெரியாதா?

449. உங்களைவிட்டால் இந்த மனதை ஓட்டுபவன் யார்? ஹே நாராயணா! நீங்களே சொல்லுங்கள்.

450. மனதை எதிர்க்கிறேன். ஆனால் அதன் ஆசை குறைவதில்லை. இந்தப் பொறிவாயில்கள் மிகவும் கடினமானவை. நீங்கள் உள்ளே நிரம்பிவிட்டால் நான் ஆசையற்று ஹரிமயமாக ஆகி விடுவேன்.

451. ஏ மனமே! ''நான் ராம'' க்ருஷ்ண'' ஹரி என்று சொல்வேன். மகிழ்ச்சியுடன் ஹரி கதை கேட்பேன். ஸாதுக்களின் பாதம் பற்றுவேன்!'' என்று சொல்வேன். நான் ஹரிப்ரேமை என்கின்ற மேடையில் கூத்தாடும் போது நீ உள் அழுக்கைக் கழுவி விட்டு தயாராகி, தாளத்தோடு தாளம் போடு. இதையாவது அவசியம் செய்.

452. ஏ மனமே! பகவானின் பாதாரவிந்தங்களில் லயித்து விடு. புலன்களின் பின்னால் ஓடாதே. பாதங்களில் எல்லா ஸுகங்களும் ஒருமிக்கக் கிடைக்கும். அவை கல்ப முடியிலும் அழியாதவை.

453. இப்படி மோசமான நிலையில் மனமும், புலன்களும் ஒருபுறம் நிற்கின்றன. மறுபுறம் நான் நிற்கின்றேன்.

அவைகளுக்கும், எனக்குமிடையே போராட்டம் தான். ஹே ஹரி! நீ இடைப்பட்டு இந்த கலகத்தை தீர்த்துவை. இதைத்தவிர வேறு வழியில்லை.

454. என்னுடைய துர்குணங்கள் எனக்குத் தெரிகின்றன. ஆனால் நான் என்ன செய்வேன்? மனதை அடக்க முடியவில்லையே. ஹே நாராயண! நீங்கள் நடுவில் வாருங்கள். கருணைக்கடல் என்கின்ற உங்கள் பெயரை மெய்யாக்கிக் காட்டுங்கள்.

455. நான் எப்படியிருந்தாலும் உன்னுடைய அடிமை. என்னுடைய தாயும், தந்தையும் நீ என்னை வருந்தச் செய்யாதே.

456. இப்பொழுது இந்த மனதை என்ன செய்வேன்? இது இன்பப் பொருளின் வாசனையைவிட மறுக்கிறது. எடுத்துச் சொன்னாலும் கேட்பதில்லை. வீழ்ச்சியை நோக்கி இழுத்துச் செல்கிறது. ஹே ஹரி! ஓடி வா! இதோ நான் முழுகி விடுவேன்.

457. இந்த மனதை அடக்குகின்ற ஒன்றையும் காண்கிலேன். சற்று நேரமும் அது ஓரிடத்தில் இருக்கிறதில்லை. கட்டைத் தட தட என்று அறுத்துக் கொண்டு பாய்கிறது. விஷயச் சுழல்கள் கொண்ட இந்த பாவக்கடலில் குதிக்கவே விரும்புகிறது. ஆசை, பேராசை, கற்பனையாகிற இந்தப் பாவி என்னை அழிக்கவே கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது. நாராயண! நீ இதையெல்லாம் பார்த்துக் கொண்டு தானே இருக்கிறாய்?

458. பரமார்த்தப் பாதையில் சொத்து, மனைவி, புகழ் இம்மூன்றும் பெரிய பள்ளங்கள். முதலிலேயே பரமார்த்த வழியில் செல்ல முயல்கின்றவர்கள் எண்ணிக்கை குறைவு. அப்படியும் துணிந்து செல்கின்றவருள் சிலர் இரண்டாவது குழியில் விழுந்து அழிகிறார்கள். தப்பி மேலே செல்கின்றவர்கள் மூன்றாவது குழியில் விழுந்து மறைந்து விடுகிறார்கள். இம்மூன்றையும் தாண்டி மேலே செல்கின்றவர்களே பகவானுடைய கிருபைக்குப் பாத்திரர்கள் ஆகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் மிகமிகக் குறைவு.

459. துறவிக்குப் பணம் பசு மாமிசம் போல. அதைத் தொடுவது என்ன? பார்க்கவே மாட்டான்.

460. கரடி நகத்தால் தோண்டியே உயிரை வாங்கிவிடும். அதைப்போல காமினியின் சேர்க்கை அழிக்க வல்லது. அதிலிருந்து விலகி இருக்க வேண்டும் என்று பரம நற்கதி விரும்பும் புருஷன் தெரிந்து கொள்வானாக!

461. உயிரே போனாலும் ஏகாந்தமாகவோ அல்லது மற்றவர்களின் நடுவிலோ பெண்களுடன் பேச்சில் ஈடுபடாதே.

462. ஹே நாராயண! பெண்களின் சேர்க்கை வேண்டாம். கல், மரம், மண்ணால் பண்ணப்பட்ட பெண்ணின் உருவம்கூட தன் மாயையின் ஆற்றலால் பகவானை எண்ணவிடாது. பகவானை பஜனை செய்யவிடாது. அதில் மயங்கிய மனம் நம் வசத்திலிருக்காது. அவர்களின் கடைக்கண் நோக்கும், உடல் அசைவுகளும், புலன்களின் வழியாக மரணத்திற்குக் காரணமாகி நுழைந்துவிடும். அவர்களின் அழகு துக்கத்தின் அடி வேராகும்.

463. வைஷ்ணவர்களுக்குப் பிற பெண்கள் ருக்மணி தேவிக்குச் சமம்.

464. மற்றவர் சொத்து, பிற பெண்ணின் ஆசை இதெல்லாம் பாமரர்களின் மனதிலேயே ஏற்படும்.

465. பெயருக்கும், புகழுக்கும் உலகம் அழிகிறது.

466. பரமார்த்த ஸாதகன் மக்களின் வலையில் படக்கூடாது. மக்கள் இரண்டு நாக்கால் பேசுகிறார்கள். இப்படியும் சொல்வார்கள். அப்படியும் சொல்வார்கள். மக்கள் கூட்டத்தை எச்சலைப்போல் ஒதுக்கிவிடு. தன் நன்மையை விரும்புகிறவன் ஜனங்களை விட்டு ஹரிபஜனையாகிய, சுலபமான மார்க்கத்தை அன்புடனும், ஆதரவுடனும் ஏற்றுக் கொள்ளட்டும்.

467. ஏ மனமே! மாயையின் வலையில் சிக்காதே. காலன் உன்னைப் பிடிக்க வருகிறான். வா! ஸ்ரீ ஹரியின் பாதங்களைப்

468. இந்த உலகத்தை விட்டவனே ஸித்த மார்க்கத்தில் கால் வைக்கிறான். (நடக்கிறான்)

469. வீட்டிற்குள்ளேயும், வெளியேயும் நமக்கு இருக்கிற உபாதைகளை ஒழிக்கத் தனித்திருத்தலே மிக உத்தமமான உபாயம்.

470. ஏகாந்தமே அரை ஸமாதி.

471. போகங்களின் உண்மைத்தன்மை தெரிந்துவிட்டால் அவை சுவையாய் இருக்காது. இயற்கையாக அவற்றிடத்தில் வெறுப்பு ஏற்பட்டுவிடும். அவற்றை விரும்ப மாட்டோம். அடைவதாகிற நித்தியமான அழகிய, ஆனந்தத்தை அடைகின்ற பேராவல் எழுந்துவிடும்.

472. பகவானிடத்தில் அன்பு வளரவளர பின்வரும் கருத்து வலுவு பெறும் - செய்பவன பகவான், நான் அல்ல. இருப்பதெல்லாம் அவனுடையது, என்னுடையதல்ல. அப்பொழுது அஹங்காரத்தின் சூறாவளியும் அடங்கிவிடும்.

473. அஹங்காரம், புகழில் ஆசை, பெருமை உணர்வு - இம்மூன்றும் லௌகிக ஈஷணைகளின் மேகங்கள், ஆழ்ந்த பக்தி என்கின்ற சூரியன் உதித்தவுடன் கரைந்து மறைந்துவிடும்.

474. நான் பாவத்தின் மூட்டை, ஹே நாராயணா! எனக்கு தண்டனை கொடு. என் கர்வத்தையும், அபிமானத்தையும் அழித்துவிடு. பிரபுவே நான் உன்னிடம் இல்லை. உலகத்திடமுமில்லை. இரண்டும் எனக்கு நழுவிவிட்டன. வெறும் திருடனாகியிருக்கிறேன்.

475. உலக மக்களிடம் இருந்து கிடைக்கும் மரியாதை, ஸாதகனைத் தரையில் தள்ளி அவனது ஆன்மிக வாழ்வைக் கூண்டோடு அழித்துவிடும்.

476. ஜனங்கள் பிரமாதமாகப் புகழ்கிறார்கள். ஆனால் அதைக் கேட்கப் பிடிக்கவில்லை. இதயம படபடக்கிறது. நீ எனக்குக் கிடைக்க வேண்டும். ஹே ஹரி! அந்தக் கலையைக் காட்டு. கானல் நீரின் பின்னால் ஓட விடாதே. இந்த எரியும்

நெருப்பிலிருந்து என்னை வெளியேற்று. எனக்கு நன்மை செய்.

477. ஸாதுக்களின் திருவடிகளின் துகள் எங்கே படுகிறதோ, அங்கே வாசனை விதை பொசுங்கிவிடுகிறது. அப்போது ராம நாமத்தில் சுவை ஏற்படுகிறது. கணத்துக்குக் கணம் ஸுகம் அதிகரிக்கிறது. தொண்டை அன்பினால் தழுதழுக்கிறது. கண்களிலிருந்து நீர் பெருகிப் பாய்கிறது. இதயத்தில் நாமமும், உருவமும் வெளியாகிறது. இது மிகவும் எளிய, அழகிய ஸாதனம். பூர்வ புண்ணியம் இருந்தால் தான் இது கிடைக்கும்.

478. உடலால், சொல்லால் மனதால் நான் ஹரியின் தாசர்களுக்கு தாசன்.

479. ஸாதுவின் சேர்க்கைக்கு மிகவும் ஆசைப்பட்டேன். பாக்கியத்தால் அது கிடைத்தது. உழைப்பெல்லாம் பயன் பெற்றது.

480. பக்தர்கள் (பாகவதர்கள்) எனக்கு மிகவும் பிடித்த சொந்தக்காரர்கள். அவர்களின் பாதங்களை என் இதயத்தில் வைத்துக் கொள்வேன். மார்பில் துளஸிமாலை அணிந்தவர்கள், மனதில் பகவந்நாமத்தை தரித்தவர்கள். அவர்களே என் இந்தப் பிறவி. ஆற்றலைத் தாண்ட உதவுகிறார்கள். சோம்பலாலோ, பெருமைக்காகவோ இருக்கட்டும். அல்லது உண்மையிலேயே பக்தி கொண்டு அவ்விதம் செய்யட்டும். எப்படியிருந்தாலும் பகவான் பெயரைச் சொல்கின்றவர்கள் என்னுடைய பரலோகத் துணைவர்கள்.

481. ஒருவன் எப்படியும் இருக்கட்டும். ஹரியின் பெயரைச் சொல்கின்றவனாயிருந்தால் அவன் பேறு பெற்றவன்.

482. ஹரி கதை என்கின்ற தாயின் அமுதம் போன்ற பாலை எவர்களுடைய ஸத்ஸங்கத்தால் நான் பருக முடிகிறதோ, அந்த ஹரி பக்தர்களின் அடிமைக்கும் அடிமை நான்.

483. அகண்ட நாமஸ்மரணத்தின் ஆனந்தத்தை இரவு, பகலாக அனுபவித்தால் ஒழிய சித்த சுத்தியைக் காண முடியாது.

484. நாமஸ்மரணத்தின் பழக்கம் ஏற்படுவது மிகவும் கடினம். ஒருமுறை சுவைத்துப் பழகினால் போதும், பிறகு நாமத்தை விட்டு ஒருகணம் கூட சும்மாயிருக்க முடியாது.

485. சித்தத்தில் உருவ த்யானமும், வாயில் நாம ஜபமும் இருப்பது தான் நாமஸ்மரணம். உள்ளே த்யானம் நிலைக்க வேண்டும். த்யானத்தில் சித்தம் நிறம் பெற வேண்டும். அது தன்மயமாக வேண்டும். இப்படியானால் தான் சொல்லில் நாமம் நிலைபெற்று வருவதற்கு அடையாளம்.

486. சித்தத்தில் த்யானம் வராவிட்டால் பரவாயில்லை. ஆனால் சொல்லில் ஏற்படுவது நாமஸ்மரணத்தின் முதல்படி.

487. ஹே ஹரி! உன்னுடைய அன்பு தரும் ஸுகத்திற்கு எதிரே வைகுண்டம் எதற்கு?

488. கோவிந்தனைப் பற்றிய சங்கல்பத்தை ஏற்று ஆனந்தமயமாகக் கழியும் காலம் பாக்கியம் செய்தது.

489. குணத்தை புகழ்ந்து பாடியும், கண்களால் உருவத்தைக் கண்டும் நிறைவு ஏற்படுவதில்லை. என்னுடைய ப்ரபு எவ்வளவு அழகாயிருக்கிறார்? நீருண்ட மேகம் போன்ற அந்த நீலவண்ணத்தின் ஒளி எவ்வளவு சோபையுடன் இருக்கிறது? அது மங்களங்களின் ஸாரம். ஸுக ஸித்தியின் கருவூலம். ஸுகத்திற்கு அங்கு கரையா இருக்கிறது?

490. நாக்கில் நாமம் இருந்தால் முக்தி. காலடியில் புரளும். அநேகருக்கு இந்த நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது.

491. நாக்குக்கு ஒரு முறை நாமத்தின் ருசி தட்டிவிட வேண்டும். பிறகு உயிர் போனாலும் அது திருப்பெயரை விடாது. நாமத்தை எண்ணுவதில் இப்படியொரு தனி இனிமை இருக்கிறது.

492. சர்க்கரையும், தித்திப்பும் ஒன்றே. அதேபோல் நாமமும், நாமியும் பெயரும், நபரும் ஒன்று. இந்த அனுபவம் பெயர் சொல்லி அதில் இன்பம் பெற்றவர்களுக்குக் கிடைக்கிறது.

493. பெயரை எண்ணுவதால் (நாம ஜபத்தால்) பிறப்பு, நோய், அச்சம், முதுமை எல்லாம் தொலைந்துவிடும். இந்தப் பிறவியாகிற பிணி எப்பொழுதுக்குமாக அழிந்துவிடும். ஸம்ஸார பாசம் அறுந்து கிழிந்துவிடும்.

494.ஹரிப் பிரேமையின், ருசி அதிகரிக்க, அதிகரிக்க நாக்கு சுவை நிறைந்ததாகி விடுகிறது. புலன்களின் ஓட்டம் குறைகிறது. உவமையற்ற ஸுகம் வீடு தேடிக்கொண்டு நம்மிடம் வருகிறது.

495. ஹரியிடம் அன்பாகிற பழக்கம் ஏற்பட்டுவிட்டால் பிறகு ஹரியைத் தவிர வேறு ஒன்றுமே கண்ணில் படாது.

496. பெயரைச் சொன்னால் மனம் அமைதியடைகிறது. நாக்கிலிருந்து அமுதம் பாய்கிறது. பெரிய, பெரிய நன்மைகள் கிடைக்கின்ற சகுனங்கள் ஏற்படுகின்றன.

497. இங்கே உட்காருவோம். விளையாடுவோம், சாப்பிடுவோம். ஆனால் அங்கே உன் புகழைப் பாடுவோம். ராமன், க்ருஷ்ணன் என்ற பெயர்களால் மாலை கட்டிக் கழுத்தில் அணிந்து கொள்வோம்.

498. ஆஸனம், படுக்கை, உணவு, பயணம் எங்கும் எந்த வேளைகளிலும் ஸ்ரீ ஹரியின் துணையிருக்கட்டும், கோவிந்தன் இருந்தால் எந்த நேரமும் நல்ல நேரமே.

499. பகவானை விட்டு இப்பொழுது வேறு பேச்சில்லை. அப்படி ஒரு நியமம் கொண்டுவிட்டேன். ஆசை, கோபத்தைக்கூட அவனுக்கே அர்ப்பணித்து விட்டேன்.

500. ஹரிஸ்மரணம் செய்பவன் ருசிக்கும் உணவே பவித்திரமானது. ஹரி கலந்த உணவே சுவையானது.

501. ஹே ஹரி! உன்னுடைய இந்த திருமுகம் ஸுகத்தாலேயே அமைந்ததுபோல் தோன்றியது. இதைப்பார்த்து என்னுடைய பசியும், தாகமும் ஓடிவிடுகின்றன.

502. உன்னுடைய மென்மையான திருவடிகளை உள்ளத்தில் ஏந்தி, கழுத்தில் உன்னுடைய பெயரின் ஒற்றைவட மாலையை அணிந்து கொண்டேன். உடலே

குளுமை அடைந்துவிட்டது. உள்ளம் பின்னால் திரும்பி அமைதியில் சேர்ந்துவிட்டது. அது இப்பொழுது நிரம்பிவிட்டது. விருப்பங்களை ஸ்ரீ கோபாலன் பூர்த்தி செய்துவிட்டான்.

503. பெயரைச் சொன்னால் தொண்டை, ஈரமாகிறது. உடல் குளுமை அடைகிறது. புலன்கள் தங்கள் போக்குகளை மறக்கின்றன. இந்த அழகிய இனிய நாமம் அமுதத்தையும் வெல்கிறது. இது என் உள்ளத்தைத் தன் வசத்தில் வைத்திருக்கிறது. இதன் ரசத்தினால் தேக ஒளிக்கு இன்பமும், புஷ்டியும் கிடைத்தன. ஒரே கணத்தில் பலவித தாபங்கள் நஷ்டமடைகின்றன. இது நாமத்தின் சிறப்பு.

504. நாமஸ்மரணத்தினால் ஹரியின் சரணங்கள். சித்தத்தில், உருவம் கண்களில், பெயர், நாக்கில். மேலும் இது உயிருக்கு ஹரிப்ரேமையின் ஆனந்த அமுத பானத்தைச் செய்வித்து அதன் ஜீவத்தன்மையை நீக்கிவிடுகிறது. பிறகு எஞ்சியது ஹரியே ஹரி தான்.

505. நாமஸ்மரணத்தினால் தெரியாதது தெரிந்து விட்டது. காணாதது காணப்பட்டுவிட்டது.. மௌனமாயிருந்த பேச்சு வெளியே எழுந்து வருகிறது. இது வரையில் பிரிவில் மறைந்திருந்த சேர்க்கை. இப்போது கிடைத்து விட்டது. எல்லாமே அவரே, அவராக ஆகிவிட்டன.

506. சித்தம் பஜனையில் செல்லச் செல்ல பகவானுடைய ஸாந்நித்யம் புரிகிறது. செய்து பார்த்தவனுக்கே இது புரியும்.

507. ஹரியின் மேல் ஆணை, பெயரை விட்டால் (ஹரி நாமத்தை) கரையேறும் வழி எனக்கு வேறு ஏதும் தெரியவில்லை.

508. நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், 18 புராணங்கள் எல்லாவற்றின் ஸாரத்தையும் சொல்லட்டுமா? அது ஸ்ரீ ராமனின் பெயரே.

509. மனிதப்பிறவியின் பயன் பகவானை அடைவதுதான்.

510. தெய்வ பக்தியினால்தான், தெய்வத்தின் உருவம் தோன்றும்.

511. பக்தியின் ரஹஸ்யத்தை அறிந்தவன் வாசலில் எட்டு மஹா ஸித்திகளும் விழுந்து புரளும். வேண்டாம் போ என்றாலும் அவை போகமாட்டா.



512. எல்லா வழிகளும் குறுகலாகி விட்டன. இந்தக் கலியுகத்தில் வேறு ஸாதனம் கிடையாது. பக்தி வழி மிக எளியது. இந்த வழியில் எல்லா வேலைகளும், ஹரிக்கு ஸமர்ப்பிக்கப் படுகின்றன. அப்பொழுது பாவ, புண்ணியத்தின் கறைபடுவதில்லை. பிறப்பு, இறப்பின் கட்டு

அறுந்துவிடுகிறது.கலியுகத்தில் வேறு ஸாதனம் கிடையாது. பக்தி வழி மிக எளியது. இந்த வழியில் எல்லா வேலைகளும், ஹரிக்கு ஸமர்ப்பிக்கப் படுகின்றன. அப்பொழுது பாவ, புண்ணியத்தின் கறைபடுவதில்லை. பிறப்பு, இறப்பின் கட்டு அறுந்துவிடுகிறது.

513. பக்திமார்க்கத்தில் செல்கின்ரவர்களுக்கு பகவானே உதவுகிறான்.

514. பகவான் இரண்டு கைகளையும் உயரத் தூக்கி நான் என்னுடைய பக்தர்களுக்கு ஸகாயமாக இருக்கிறேன் என்கிறான். ''ந மே பக்த: ப்ரணஶ்யதி''

515. உயிர் 'அநந்ய' பாவத்துடன் பகவான் பாதங்களைப் பற்றும்போது பகவான் பற்றுபவனை மடியில் ஏந்திக் கொள்கிறார். இப்படிப்பட்ட வழி பக்திமார்க்கம் ஒன்றுதான்.

516. ஜபம் செய். தவம் செய். அனுஷ்டானங்களைச் செய். வேள்வி செய். யோகம் செய். ஸாதுக்கள் எந்தெந்த வழிகள் அமைத்துக் கொடுத்திருக்கிறார்களோ, அந்த வழிகளையெல்லாம் கடைப்பிடி.

517. சான்றோர்களின் அருளுரைகள் ஸத்யம் என்று நம்பி நாராயணனின் பாதங்களை அடை.

518. அன்பைப் பேச முடியாது. சொல்ல முடியாது. கையில் எடுத்துக்காட்ட முடியாது.

519. அன்பு சித்தத்தில் எழும் அனுபவம். அதைச் சித்தமே அறியும்.

520. பகவானை, சிந்தனை செய்தல், அவர் பெயரைச் சொல்லுதல் அவருடைய உருவத்தில் தன்மயமாதல். இதுவே என்னுடைய தபம், யோகம், யாகம், ஞானம், ஜபம், தியானம், இதுவே குல ஆசாரம். ஏன்? எல்லாமே அதுதான்.

521. கர்மம் - ஞானம் - யோகம் இவற்றால் சில சமயங்களில் குறைவாக கிடைக்கும். பலன, ஹரியின் அன்பினால் உறுதியாகக் கிடைத்து விடுகிறது. இதனால்

பக்தியோகமே எல்லாவற்றிள்ளும் சிறந்த யோகம். நாராயணன் பக்திக்கு வசப்படுதல்.

522. பக்தி - ப்ரேமையின் ஆனந்தத்தை மற்றவர் அறிய முடியாது. அவர்கள் நிரம்பப் படித்தவர்களாய் இருந்தாலும் சரி, ஞானிகளாய் இருந்தாலும் சரி, ஏன்? ஜீவன் முக்தர்களுக்கே கூட பக்தியின்பம் துர்லபம், நாராயணன் அருள்புரிந்தாலே இதன் ரஹஸ்யம் புரியும்.

523. ஸகுணம், நிர்குணம் இரண்டையுமே தன் அங்கங்களாகக் கொண்டவரே, நம்முடன் விளையாடுகிறார்.

524. ஸகுணத்தின் சொரூபத்தைப் பார்த்த உடனேயே பசி, தாகம் மறந்து விடுகின்றன. மனம் அன்பு மயமாகிவிடுகிறது.

525. விளக்கைக் கையில் எடுத்தவுடன் வீடெங்கும் வெளிச்சம் அப்படியே மனதில் ப்ரபுவினுடைய மூர்த்தி த்யானிக்கப்பட்டவுடன் அனைத்துப் படைப்பிலும் அவர் தோற்றம் தருகிறார்.

526. பகவானுடைய மூர்த்தியைப் பார்த்தல், தொடுதல், பஜனை செய்தல், பூஜை செய்தல், பேசுதல், பாடுதல், மனம் சிந்தனம் என்று செய்து கொண்டிருப்பதால் உபாஸனை செய்யப்படும் அந்த மூர்த்தி த்யானத்தில் அமர்ந்து, சித்தத்தில் விளையாடுகிறார். கனவில் வந்து கட்டளை தருகிறார். நம் முதுகருகிலேயே இருக்கிறார் என்கிற நம்பிக்கை ஏற்படுகிறது. அவரிடத்தில் அன்பு பெருகி கொண்டே போகிறது. அவரை அடைய உள்ளம் துடிதுடிக்கிறது. அப்பொழுது நேரடியாக தரிசனம் கிடைக்கிறது. எல்லையில் எங்கும் எல்லா உயிர்களுள்ளும் அவரே நிறைந்து இருக்கின்றார் என்று உணரும் நிலையும் வருகிறது. பிரம்மாண்டத்திலும் அவர் தவிர வேறு ஒன்றுமில்லை என்னுள்ளும் அவர் தான் அவரே நானும்.

527. ஸமத்வம் என்ற நிலை அடைந்த பக்தனும், பக்தியின் இன்பத்தைச் சுவைப்பதற்காக பகவான் வேறு பக்தன் வேறு என்கின்ற த்வைத நிலையை மனதின் மகிழ்ச்சிக்காக ஏற்படுத்திக் கொள்கிறான்.

528. காற்று அசையும் போது ஆகாசத்திலிருந்து அது தனிப்பட்டு தோன்றுகிறது. ஆனால் ஆகாசமோ இருந்தபடி இருக்கிறது. அப்படியே பக்தன் உடலால் வேலை செய்யும்பொழுது பக்தன் என்று தனியாக இருக்கிறான். ஆனால் உள்ளுணர்வில் அவன் பகவானின் சொரூபமாகவே இருக்கிறான்.

529. ஸித்தாந்தம் அத்வைதமாக இருக்கட்டும். அத்துடன் பக்தியின் ஆனந்தமும் இருக்கட்டும். இதுதான் பாகவத தர்மத்தின் ரஹஸ்யம்.

530. தேவகி - வஸுதேவ நந்தனனே இயங்கும், நிற்கும் உருவமானவன். எல்லாத திக்குகளிலும் கண்கள் கொண்டவன். எல்லா இடத்திலும் இருக்கும் பரமாத்மா. பக்தர்களின் மகிழ்ச்சிக்காக அவன் உருவற்றவனாயிருந்தாலும் தோற்றம்மகிழ்ச்சிக்காக அவன் உருவற்றவனாயிருந்தாலும் தோற்றம் எடுக்கிறான்.

531. யாருக்கு எப்படி எண்ணமோ, பகவான் அப்படியே இருக்கிறார்.

532. வழிமேல் விழி வைத்து வைத்து களைத்துவிட்டது. இக்கண்களுக்கு உன் பாதத் தாமரையை எப்பொழுது காட்டுவாய்? நீ என் தாய், தயை நிறைந்த நிழல் எப்படி உனக்கு இதயம் இவ்வளவு கல்லாயிற்று? என் உயிரே! ஹரியே! என்னுடைய கைகள் உன்னை அடையத் துடிக்கின்றன.

533. ஹே ஹரி! எளியோருக்கு அடைக்கலமே! உன்னுடைய இந்த அழகிய ஸகுண உருவம் தான். எல்லாம் பாவிகளைக் காப்பவனே! நீ எவ்வளவு நேரம் ஆக்குகிறாய்? வாக்கையே மறந்து விட்டாயே. வீடு, குடும்பம் எல்லாவற்றையும் எரித்துவிட்டு உன் வாயிலில் வந்து அமர்ந்து இருக்கிறேன். இதை நீ சற்றுக்கூட நினைவில் கொள்ள மறுக்கிறாயே! என்னுடைய உயிர்த்தோழனே! பிடிவாதம் செய்யாதே, வந்து தரிசனம் கொடு.

534. என்னுடைய உள்ளத்தின் பெரிய ஆசை எல்லாம்

உன்னுடைய பாதங்கள் கிடைக்கவேண்டும் என்பது தான். இந்த நிரந்தரப் பிரிவை எண்ணி சித்தம் வருந்துகிறது.

535. என் உள்ள நிலையை எப்படிச் சொல்வேன்? எப்படிக் கூவுவேன்? எப்படிக் கூறுவேன் நான்கு கை கொண்டவனை (விஷ்ணுவை) பார்க்காமல் அமைதி ஏற்படவில்லை. நீ அல்லாத எதையும் என் மனம் விரும்பாது நாதா! எனக்கு உன்பாதங்களைக் காட்டு தரிசனம் செய்துகொள்கிறேன்.

536. ஏன் உயிரே! ஒருமுறை வா! மார்புடன் அணைத்துக்கொள்.

537. இந்தக் கண்கள் அவிந்தால் தான் என்ன? போயிற்று? புருஷோத்தமனைக் காணாத கண்கள். இப்பொழுது ப்ரபு இல்லாமல் ஒரு கணம் கூட உயிர் வாழ இஷ்டமில்லை.

538. இப்பொழுது உனது திருமுகத்தைக் காட்டு. கண்களின் பசி அடங்கட்டும்.

539. வா! முதுகில் தடவிக் கொடுத்து உன் மார்புடன் அணைத்துக் கொள்.

540. என்னை வந்து பார்த்து, என்னுடன் இரண்டு வார்த்தை பேசி விட்டால் உனக்கு என்ன செலவு?

541. அருவத்தை விரும்பிகின்றவர்களுக்கு நீ அருவம், ஆனால் நான் உன்னை உருவத்துடன் பார்க்கத்தான் அன்பு செய்கிறேன், அந்த அழகும், அந்த சுவையும் எனக்கு வேண்டும்.

542. என்னுடைய உள்ளம் உன் திருவடிகளில் படிந்திருக்கிறது. நான் அஞானி, குழந்தை உன்னைவிட்டு ஒதுங்கியிருப்பகற்காக என்று பெரியவர்களைப் போல் நடந்து கொள்ள முடியுமா?

543. அறிவில்லாதவனாகிய நான் ஞானிகளுக்கு எப்படிச் சமமாக முடியும்? குழந்தை பெரியவனாகிவிட்டால் தாய் அவனைத் தள்ளி வைத்துவிடுவாள். அறியாத பச்சைக் குழந்தைக்கு அம்மா மடி தானே இடம்?

544. பிரஹ்மஞானிகளுக்கு மோக்ஷம் கொடு. எனக்கு வேண்டாம், என்னை விட்டுவிடு.

545. நாக்கு உன் பெயரின் சுவைக்குப் பழக்கப்பட்டு விட்டது. கண்களுக்கு உன்னுடைய திருவடிகளை தரிசிப்பதில் தாகம், இந்த எண்ணம் மாறப் பேவதில்லை. எனவே இந்தப் பிரேமரசத்தை விடாதே என்னைத் வற்ற அடித்து தொலைவில் தள்ளி விடாதே. எனக்கு நீ தான் வேண்டும், நீ கொடுக்கும் மோக்ஷம் அல்ல.

546. நாக்கு உன் பெயரின் சுவைக்குப் பழக்கப்பட்டி விட்டது. கண்களுக்கு உன்னுடைய திருவடிகளை தரிசிப்பதில் தாகம். இந்த எண்ணம் மாறப் போவதில்லை. எனவே இந்தப் பிரேமரசத்தை வற்ற அடித்து விடாதே, என்னைத் தொலைவில் தள்ளி விடாதே, எனக்கு நீ தான் வேண்டும், நீ கொடுக்கும் மோக்ஷம் அல்ல.

547. இப்படி உம் என்று வாயை மூடி ஏன் உட்கார்ந்திருக்கிறாய் என் வார்த்தைக்கு பதில் சொல். நான் சேர்த்த புண்ணியம் அனைத்தும் நீயே. என்னுடைய நற்கர்மம், சுதர்மம், நித்திய நியமம் எல்லாம் நீ. ஹே நாராயண. நான் உன்னுடைய அருளுரைக்குக் காத்திருக்கிறேன்.

548. பக்தர்களின் மெய்யன்பனே! ஸர்வோத்தமா! என்னோடு பேசு. சரணாகதன் நான். மகாராஜனே! முதுகைக் காட்டாதே. இது என்னுடைய வேண்டுகோள். உன்னை அழைக்கின்றவர்களுக்கு உடனே பதில் சொல். அழுகின்றவர்கள் அழுகையைக் கேள். அவர்களிடம் ஓடி வா! களைத்தவர்களை ஆசுவாசப்படுத்து. எங்களை மறக்காதே. நாராயணா! இதுவே என் வேண்டுகோள்.

549. ஏன் என்னைத் தொந்தரவு செய்கிறாய்? 'போ அப்பால்' என்றாவது ஒரு முறை சொல்லேன். ஹே ஹரி! நீ ஏன் இவ்வளவு கொடுமைக்காரனாக இருக்கிறாய்?

550. ஸாது, சான்றோர்களுடன் நீ முதலிலேயே சேர்ந்து இருக்கிறாய். அவர்களுடன் பேசி இருக்கிறாய். அவர்கள் பாக்யவான்கள். எனக்கு அவ்வளவு பாக்யம் இல்லையா? நீ

இதுவரையில் யார் நம்பிக்கையையும் அழித்ததில்லை. உன்னுடன் சேரவேண்டும் என்பது தான் என்னுடைய உள்ளத்தில் ஒரே கிட்க்கை. அது இல்லாமல் என் மனதில் அமைதி இல்லை.

551. உன் பாதங்களைப் பற்றி விட்டேன்; எனக்குத் தெரியும், உன்னுடைய ஒரு அடிமையும் நிறைவேறாத ஆசையை உடையவனாக இருந்ததில்லை.

552. பஞ்சத்தில் பசித்தவன் எதிரே அறுசுவை உண்டிகள் நிறைந்த சாப்பாட்டுத் தட்டு இருந்தாலோ அல்லது பசித்த பூனைக்கு எதிரே வெண்ணெய் உருண்டை தென்பட்டாலோ, அதன் நிலைமை எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது. என் நிலை. உன்னுடைய பாதங்களுக்கு மனம் அடித்துக் கொள்கிறது. கலப்பதற்கு உயிர் வற்றிக் கொண்டிருக்கிறது.

553. ஹே ப்ராணேச்வர! உன்னைத் தவிர எங்கள் மேல் அன்பு வைக்க இந்த உலகில் வேறு யார் இருக்கிறார்கள்? யாரிடம் எங்கள் ஸுக, துக்கங்களைச் சொல்வோம்? யார் எங்களுடைய பசி தாகத்தைத் தீர்ப்பார்கள்?

554. எங்கள் தாபத்தை நீக்குபவர் வேறு யார் இருக்கிறார்? நாங்கள் யாரைக் கேட்போம்? அன்புடன் எங்கள் முதுகைத் தடவிக் கொடுப்பதற்கு யார் உண்டு?

555. அம்மா! ஓடி வா! இன்னும் என்ன பார்த்துக் கொண்டு இருக்கிறாய். இனி பொறுமையில்லை. பிரிவு வாட்டுகிறது. மனதுக்குக் குளுமை அளி. அழுதே காலம் கழிந்து விட்டது. உன் பாதங்களில் இந்தத் தலையை எப்பொழுது சாய்ப்பேன்? அந்த ஒரு கவலைதான்.

556. உன்னால் பதினாராயிரம் ஆக முடியும். பதினாராயிரம் (கோபியர்) பெண்களுக்காக பதினாராயிரம் உருவம் எடுத்தாய். அப்படிப்பட்ட உனக்கு இன்று இந்த அதிர்ஷ்டக் கட்டைக்காக ஒரு உருவம் எடுத்துக் கொள்வது இவ்வளவு கஷ்டமாகி விட்டதா?

557. உன் பெருந்தன்மையைப் புரிந்து கொண்டேன்.

தலையையே உன் கால்களில் வைத்திருக்கிறேன். நீ உன் கழுத்தின் மாலையை எடுத்து என் கையில் தரமாட்டாய். புரிகிறது, மோரே கொடுக்க முடியாதவர் உணவு எங்கே தரப் போகிறார்?

558. வாசலில் நின்று எவ்வளவு நேரமாகக் கூப்பிடுகிறேன்! 'ஊம்' என்கின்ற ஒலியைக்கூட எழுப்பும் தேவையை உணராமலா இருக்கிறாய்? விருந்தாளி வந்தால் வார்த்தைகளாலாவது அவனை சந்தோஷப்படுத்துவதில் என்ன செலவு ஏற்படப் போகிறது?

559. ஏ பகவானே! ஏமாற்றி அலைய வைப்பதில் நீ கை தேர்ந்தவனாயிருக்கிறாய். நானும் ''சண்டி''தான். உனக்கு வாயை மூடிக் கொண்டு உட்கார்ந்திருப்பதே சரியென்றுபடுகிறது. அதற்காக நான் உன் அங்கவஸ்திரத்தை விட்டுவிடுவேனா?

560. உண்மையில், பரமாத்மனே! உன்னிலிருந்து தானே நான் வந்தேன்? உன்னைவிட்டு நான் எப்படித் தனித்து இருக்க முடியும்?

561. பகவானே! உன் அன்புக்காக, உன்னுடைய ஒரு சொல்லுக்காக, உன்னுடைய தரிசனத்துக்காக நான் என்ன செய்ய மாட்டேன்? கட்டளையிடு! ஏதாவது சொல்லேன்!

562. என்னுடைய சித்தம் உன்னை அடைவதற்குத் துடித்துக் கொண்டிருக்கிறது. நீ ஆனால் எங்கேயோ பார்க்கிறாய். நான் குறைவுள்ளவன்தான். குற்றவாளிதான், பாவிதான். அதற்காகக் கோபித்துக் கொள்வாயா? ஒன்றுமறியாத பச்சிளம்பிள்ளை என்னை அழவிடாதே.

563. என்னை பாவி என்று சொல்லும்போது உன் திருவடிகள் நினைவுக்கு வருகின்றன. என்னுடைய பாவம், உன் திருவடிகளை விட பலம் வாய்ந்ததா என்ன?

564. தெய்வமே! நாங்கள் விஷ்ணுவுக்கு அடிமைகள். எங்கள் பலம், நம்பிக்கையெல்லாம் நீ தான். ஆனாலும் இந்தக் காலனைப் பார்க்கிறேன். எங்களையே ஆள்கிறான்.

565. பகவானே! நான் உன் பிள்ளையல்லவா? பிள்ளையைச் சோதிப்பதும் உண்டா? ஏழைப் பங்காளா! உன்னுடைய பட்டப் பெயரின் பெருமையைக் காப்பாற்றிக் கொள்.

566. பகவானே! என்னை ஏன் திரஸ்கரிக்கிறாய்? (வெறுத்து ஒதுக்குகிறாய்) இப்படிச் செய்வதாய் இருந்தால் முதலில் ஏன் திருவடிகளில் அன்பை ஏற்படுத்தினாய்? உயிரை வாங்க எண்ணியவர் என் பார்வையில் ஏன் பட்டீர்?

567. பகவானே! நான் என் உடலையே உங்கள் திருவடிகளில் அர்ப்பணித்து விட்டிருக்கிறேன். என்னைத் தொட்டால் தீட்டு ஒட்டிக் கொள்ளுமா? அல்லது எதிரே வர வெட்கமா? இதயநாதா! அன்பைத் தந்து என் வருத்தத்தைத் தணிப்பாயாக!

568. உங்கள் திருவடிகளில் என்னுடைய ஊடலை எப்படிக் காட்ட முடியும்? எனக்குள்ள உரிமை அடிமையாய் நின்று கருணைப் பிச்சைக் கேட்பது தான்.

569. உன்னுடைய திருவாயிலிருந்து இரண்டு சொற்கள் கேட்க வேண்டும். உன்னுடைய திருமுகத்தைக் காணவேண்டும். இதுதான் என்னுடைய ஒரே ஆசை.

570. பகவானே! ஏன் என்னோடு பேசாமல் இருக்கிறீர்? என்னை ஏன் அழவிடுகிறீர்? உயிர் தொண்டைக்கே வந்துவிட்டது. உமது அருளுரையை எதிர்நோக்கி இருக்கிறேன். என்னை பகவானுக்குரியவன் என்று எல்லோரும் சொல்கிறார்கள். எனக்கோ, பகவானை சந்திக்கக்கூட முடியவில்லை. எனக்கு ஒரே வெட்கமாயிருக்கிறது.

571. பகவானே! என்னுடைய அன்புத் தந்தியை அறுத்து விடாதே. உன் அருள் கிடைத்துவிட்டால் இவ்வளவு எளியவனாக இருக்க மாட்டேன். வயிறு நிரம்பியவன் வயிறு நிறைந்துவிட்டது என்று சொல்ல தேவையிருப்பதில்லை. திருப்தி மகத்திலேயே வெளிப்படும். முகத்தின் ஒளி தான் அதற்கு அடையாளம்.

572. பெண்ணை எவ்வளவு அலங்கரித்தாலென்ன? கணவனின் நெருக்கம் கிடைக்காவிட்டால் அவள் மனதிற்குள்ளேயே குமுறுவாள். அப்படியே நீயில்லாமல் எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை.

573. பிரானே! உன்னைப் பார்க்காமல் இப்படிப் பேசிக் கொண்டேயிருந்தால் இந்த ஸாதுக்கள் என்னை என்ன சொல்வார்கள்? இதைச் சற்று சிந்தித்துப் பார்.

574. பகவானை நேரில் தரிசிக்காதவர்களை ஸாதுக்கள் மதிப்பதில்லை. சான்றோர்களின் அடையாளம் பகவானை ஸகுணமாக நேரில் சந்திப்பது தான். உண்டால் அல்லால் திருப்தி ஏது?

575. பகவான் என்னை கட்டிக் கொண்டு ஆசையாக என் அங்கங்களை அமைதிப்படுத்துவார். அமுத நோக்கால் பார்த்து என் உள்ளத்தை குளிர்விப்பார். மடியில் வைத்துக் கொண்டு பசி, தாகம் விசாரிப்பார். பீதாம்பரத்தால் என் முகத்தைத் துடைப்பார். ஆசையுடன் என்னைப் பார்த்து முகவாய் கட்டையைப் பிடித்து எனக்கு சமாதானம் கூறுவார். எனக்குத் தாயும், தந்தையுமான விச்வம்பரா! (உலகைத் தாங்குபவனே) இவ்விதம் எனக்குக் கொஞ்சம் அருள்புரி.

576. எனது தாய் தந்தையரே! எனக்குத் தாங்கள் தர்சனம் அளியுங்கள். நான் தங்களை நேராகப் பார்க்க விரும்புகின்றேன். தங்களோடு பேச விரும்புகிறேன். மேலும், தங்களுடைய திருவடிகளைப் பற்றிக் கொள்ள விழைகிறேன். பிறகு தங்களது திருவடிகளிலேயே எனது பார்வையைப் புதைத்து இருகரங்கூப்பி விநயத்துடன் நின்று கொண்டிருப்பவனாகவும், இதுவே எனது மிகப் பெரிய விருப்பமாகும். ஹே நாராயண! எனது இந்த விருப்பத்தை நீ நிறைவேற்றி வை.

577. என்னுடைய பெரிய ஆசை, நீ என்னுடன் பேச வேண்டும். எனக்கு ஸுகம், அளிக்க வேண்டும். கண்கள் நிரம்ப உங்கள் திருமுகத்தைப் பார்க்க வேண்டும். உங்கள் பாதத்தின் மேல் ஆணை, நான் சொல்வது முற்றிலும் உண்மை.

578. உன்னுடைய அன்பில் கிடைக்கும் ஆனந்தத்தை விட்டு ஜீவன் முக்தனாதல் எதற்கு? இந்த ஸுகத்தை உதைத்துத் தள்ளுகின்ற அபாக்கியவான் எவன் இருப்பான்?

579. கோபியர் ரமணா! எனக்கு உன் உருவத்தைக் காட்டு. என் தலையை உன் திருவடிகளில் வைக்கிறேன். அழகிய திருமுகத்தைப் பார்க்கிறேன். உன்னை அணைத்துக் கொள்கிறேன். உப்பும், கடுகும் சுற்றி எறிகிறேன். நீ கேள், என் கதை எல்லாம் சொல்கிறேன். இருவரும் தனியே அமர்ந்து ஸுகம் தரும் சொற்களைப் பேசுவோம்.

580. நான் நாதனற்றவன். நீ தான் எனக்கு நாதன். ஒருமுறை வாயேன்.

581. உனக்காக ஜீவன் துடித்துக் கொண்டிருக்கிறது. இதயம் மருகுகிறது. சித்தம் உன் திருவடிகளிலேயே படிந்திருக்கிறது. இனி நீயின்றி என்னால் இருக்க முடியாது.

582. கருடனின் பாதங்களில் மீண்டும் மீண்டும் தலை தாழ்த்துகிறேன். ஏ கருடரே! ஹரியை சீக்கிரம் அழைத்து வாருங்கள். நான் எளியவன், என்னை கரையேற்றுங்கள். பகவானுடைய சரணங்கள் லக்ஷ்மியின் கைகளில் இருக்கின்றன. அன்னையே! ஸ்ரீ ஹரியை சீக்கிரம் அழைத்து வாருங்கள். என்னைக் காப்பாற்றுங்கள். அனந்தரே! கண்ணனைப் பள்ளியுணர்த்துங்கள்.

583. ஹே நாராயணா! அந்த இடையர்கள் தமது பேறு பெற்ற கண்களினால் எப்படிப் பார்த்திருப்பார்கள்? அவர்கள் ஸுகத்தை நினைத்தால் என் மனம் பேராசைப்படுகிறது. இந்த ஆனந்தம் எனக்கு எப்போது கிடைக்கும்? உன் முகத்தையே இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டேயிருந்தால் கிடைக்கும் ஆனந்தம் எவ்விதம் இருக்கும்? அனுபவமில்லாமல் நான் எப்படி அறிவேன்? உன் உருவத்தை இக்கண்களால் எப்போது பார்ப்பேன்? உன்னை அணைத்துக் கொள்ளும் ஆனந்தம் எப்பொழுது கிடைக்கும்? என் சித்தம் ஒவ்வொரு கணமும் அதையே எண்ணிக் கொண்டிருக்கிறது.

584. நீருண்ட மேகத்தின் நீலவர்ணம், அந்த மஞ்சள் பட்டு, அந்த மகுடம், அக்குண்டலங்கள், சந்தனப்பூச்சு, அந்த கௌஸ்துப மணி, அந்த வைஜயந்தி மாலை, இனிமை நிரம்பிய அந்தத் திருமுகம் இவ்வளவையும் கொண்டு அந்த ஸுகுமாரனான மதன மூர்த்தி ஸ்ரீக்ருஷ்ணன் எதிரே நிற்கிறார். அவர் தோழர்களான கோபாலர்கள் அவருடைய அழகிய திருமுக கமலத்தை இமைக்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள் ஆனாந்தனுபவம் பெறுகிறார்கள். இந்த அழகிய காட்சி என் கண் எதிரே கூத்தாடிக் கொண்டு இருக்கிறது.

585. என் கண்களால் க்ருஷ்ணனை மனம் நிறைய எப்பொழுது பார்ப்பேன்? அவர் எப்பொழுது தன் கைகளால் தன் மார்புடன் என்னை அணைத்துக் கொள்வார். இந்த ஆசை தான் என் உள்ளத்தைக் கவ்விப் பிடித்து கொண்டிருக்கிறது.

586. வேத வனத்தில் கண்ணனைக் காணாமல் அலைந்து, திரிந்து, சுற்றிச்சுற்றி ஏன் களைப்படைகிறாய்? இடையர்கள் வீட்டிற்குப் போ, அங்கே கயிற்றினால் கட்டப்பட்ட அவரைக் காண்பாய்.

587. கீதை உபதேசம் செய்த அதே கண்ணனா எனக்கு எதிரே நிற்கின்றார்?

588. உன்னுடைய திருமுகத்தையும், திருவடிகளையும் கண்டிப்பாய் பார்ப்பேன். அதையே நினைத்து என் மனம் அமைதியில் இருக்கிறது. பாண்டவர்களுக்கு எப்பொழுதெல்லாம் கஷ்டம் வந்ததோ, அப்பொழுதெல்லாம் உன்னை நினைத்த உடன் வந்துவிட்டாய். திரௌபதியைக் காக்க அவள் ரவிக்கையில் முடிச்சுப் போட்டு விட்டாய். ஆயர் மகளிருடன் வேடிக்கைகள் புரிகிறாய். பசுக்களுக்கும், பசு மேய்ப்பவர்களுக்கும் இன்பம் தருகிறாய். அதே வண்ணத்தை எனக்குக் காட்டு. நீ அனாதைகளுக்கு நாதன் அல்லவா? சரணாகதி அடைந்தவர்களுக்கு புகலிடம் அல்லவா? என்னுடைய இந்த ஆசையைப் பூர்த்தி செய்.

589. க்ருஷ்ணன் என் தாய். என்னுடைய தந்தையும் அவரே. என்னுடைய வாழ்க்கையின் உயிரும் அவரே.

590. அனந்த ப்ரம்மாண்டமும் எவர் வயிற்றில் அடக்கமோ, என்னுடைய வாழ்க்கையின் உயிரும் அவரே.

591. உள்ளேயும் ஹரி, வெளியேயும் ஹரி. ஹரிதான் தன்னுள்ளே அடக்கி வைத்திருக்கிறார்.

592. இடுப்பில் தங்க உடை அழகு தருகிறது. மார்பில் கால் வரையில் துளஸிமாலை தொங்குகிறது. அந்த அழகிய, இனிய மேகச்யாமனைப் பார்க்க, உயிர் கண்களின் மூலம் பிரிந்து விடுமோ என்று தோன்றுகிறது.

593. ஸ்ரீகிருஷ்ணன் லீலா மூர்த்தி, அவருடைய தோற்றம் உலகை மயக்கவல்லது. அவருடைய த்யானம் மங்களம் தரவல்லது. வேதங்களின் பிறப்பிடம். ஆறு சாஸ்திரங்களின் தெளிவு. ஆறு தரிசனங்களின் புதிர். இப்படி க்ருஷ்ணன் பூர்ணாவதாரம்.

594. பக்தியின் ரஹஸ்யத்தைத் தெரிந்து கொள்ள விரும்பினால் வா. பிருந்தாவன லீலையை ஏற்றுக் கொள்.

595. நான்கு வேதங்களும் எவருடைய கீர்த்தியை வர்ணிக்கின்றனவோ, எவர் யோகிகளின் த்யானத்தில் கணநேரம் கூடத் தோன்றுவதில்லையோ, அவர் கோபியருடைய கைகளில் கட்டுப்படுகிறார். பக்தி உணர்வு கொண்ட கோபியர் அவரைப் பிடித்துக் கட்டி வைத்திருக்கிறார்கள். அந்த ப்ரேமை நிறைந்த பெண்களிடம் இவர் தானே சென்று கெஞ்சுகிறார். ஆனால் படித்த பண்டிதர்களோ, அவரைக் காணாமல் தேடுகிறார்கள்.

596. இந்தக் குழந்தை மனமுள்ள ஆயர் சிறுமியரின் பூர்வ புண்ணியத்தை யார் கணக்கிடுவது? அவர்கள் முராரியுடன் உள்ளேயும், வெளியேயும் விளையாடினார்களே, தங்களை அவருக்கு அர்பணித்து கொண்டார்களே. யார் ஒரே பிடிவாதத்துடன் அவரை அறிந்துக்கொண்டார்களோ எம்பெருமான் அவர்களுக்கு ஆத்ம ஸுகம் தருகிறார். யார் தன்னுடைய உடலையும், மனதையும் ஸ்ரீக்ருஷ்ணனிடம் வைத்துவிட்டார்களோ, யார் வீடு, வாசல், கணவன், குழந்தைகளை மறந்து விட்டார்களோ, எவர்களுக்குப் பணம்,

பெருமை, உறவு எல்லாம் நஞ்சுபோல் ஆகிவிட்டனவோ, அந்தப் பெண்கள் ஏகாந்தமான வனத்தில் பகவானிடம் சென்று சேர்ந்தார்கள்.

597. உடலை பற்றிய எண்ணத்தையே விடுதல், நினைவுகள் அனைத்தையும் துறத்தல் இதுவே நாராயணனுக்குச் செய்யும் முழுபூஜையும், அர்ச்சனையுமாகும், இப்படிப்பட்ட பக்தர்களின் ஆராதனையை பகவான், பக்தர்கள் அறியாமலே கூட ஏற்றுக் கொள்கிறார், அவர்கள் கேட்காமலே தன்னுடைய இடத்தையும் கொடுத்து விடுகிறார்.

598. அந்த ஆயர் மங்கையரின் புண்ணியம் தான் எவ்வளவு? அந்தப் பசுக்கள், எருமைகள், மற்ற மிருகங்கள் எல்லாம் எவ்வளவு பேறு பெற்றவை? அவர்கள் பெற்ற ஆனந்தம் மற்றவருக்கு, பிரம்மா முதலியவருக்குக் கூட கிடைக்காத ஒன்றாகும்.

599. கோபியர்கள் கும்மி, கோலாட்ட விளையாட்டில் தங்களை மறந்தார்கள். அதே போல் நம்முடைய சித்த வ்ருத்திகளும் கிருஷ்ணன் அன்பாகிற தடாகத்தில் முழுகி விடட்டும்.

600. பக்தன் ஸங்கத்தால் எல்லா எண்ணங்களும் ஹரிமயமாக ஆகி விடுகின்றன. சொல்லாமலேயே ஹரி எல்லா வேலைகளையும் செய்துவிடுகிறார். இதயப் பெட்டிக்குள் அடங்கி விடுகிறார். வெளியேயும், சின்ன உருவத்தில் வந்து சேருகிறார்.

601. ஸ்ரீ ஹரி எல்லா பூதங்களுள்ளும் திளைத்துக் கொண்டு இருக்கிறார். நீர், நிலம், மரம், கல் எல்லாவற்றுள்ளும் வீற்றிருக்கிறார். நிலம், நீர், நெருப்பு, வளி, வெளி இந்த ஐந்து மகா பூதங்களுள்ளும் வியாபித்திருக்கிறார். இந்த பிரம்மாண்டத்திலும் அவரைத் தவிர வேறு ஒரு பொருளும் கிடையாது. இது ஸாஸ்திரங்களின் சித்தாந்தம், சாதுக்களின் அனுபவம்.

602. மனிதன் எந்த ஜாதியில் பிறந்திருந்தாலென்ன? நல்ல

ஆசாரங்களை கடைபிடிக்கின்ற, தெய்வ பக்தனாய் இருந்தால், அவன் எல்லோருக்கும் பூஜைக்குரியவனாகிறான், சிறந்தவனாகிறான். ஒருவன் பூஜிக்கத்தக்கவனா என்பதற்கு உரைகல் சாதி அல்ல. உரைகல் சாதுத்தன்மை, பகவத் பக்தி.

603. நான் என்னுடைய குற்றங்களையும், குறைகளையும் எவ்வளவு தான் சொல்வேன்? தயை கொண்ட என் தாயே, உன் திருவடிகளில் என்னை ஏற்றுக்கொள். இந்த உலக அனுபவம் போதும். சிந்தை வலையை அறுத்துக் தள். என் இதயத்தின் சொத்தே! இதயத்தில் வந்து நீ அமர்ந்து கொள்.

604. சித்தம் சுத்தமானால் எதிரியும் நண்பனாவான். சிங்கம், பாம்பும்கூடத் தன் கொலைக் குணத்தை மறந்துவிடும். நஞ்சு அமுதமாகும். அடியும் இதமாகும். துக்கம், ஸுகமாகின்ற பழத்தைத் தருவதாக ஆகிவிடும். நெருப்பு குளிர்ந்த காற்றாகும். எவன் சித்தம் சுத்தமாகியிருக்கிறதோ, அவனை எல்லா உயிர்களும் தங்கள் உயிரைப் போல நேசிக்கின்றன. ஏனென்றால் எல்லார் உள்ளத்திலும் இருக்கின்றது ஒரே உணர்வுதான்.

605. அடிக்கின்ற இரும்பு கூட பாரசக்கல் பட்டால் தங்கமாகிறது. துஷ்டர்களும் ஸாதுக்கள் தொடுவதால் ஸாதுக்கள் ஆகிவிடுவார்கள்.

606. நாராயணனுக்கு எவன் விருப்பம் உள்ளவனாக ஆகிவிட்டனோ, அவன் வர்ணம் உயர்ந்ததென்ன? தாழ்ந்ததென்ன? நான்கு வர்ணத்தவரும் இதற்கு உரிமை உள்ளவர்களே. அப்படி அவனை வணங்குவதில் ஒரு குற்றமும் இல்லை.

607. சித்தத்தின் தவறான போக்கில் சிக்கிவிட்டேன். கானல் நீரும் (உலக வாழ்க்கை) என்னை ஏமாற்றிவிட்டது. ஈச்வரனுடைய க்ருபையால் என் கண்கள் திறந்துவிட்டன. என் வேண்டுகோளை நீ கேட்டுவிட்டாய். இதனால் நான் அச்சம் நீங்கியவனாய் ஆகி விட்டேன்.

608. ப்ரபு தன்னுடைய பக்தனைத் துக்கமுள்ளவனாக அனுமதிப்பதில்லை. தன் அடிமையின் கவலையைத்தானே

ஏற்றுக் கொள்கிறார். ஆனந்தமாக ஹரி கீர்த்தனம் செய். மகிழ்ச்சியுடன் ஹரியின் குணங்களைப் பாடு. கலிகாலத்துக்கு அஞ்சாதே. கலிமல நிவாரண காரியத்தை எம்பெருமானின் அழிப்படை தானே ஏற்கும். பகவான் பக்தனை ஒரு பொழுதும் விடமாட்டான்.

609. ஹரி நாமமே விதை. அதுவே பழம், புண்ணியம் அது, தர்மமும் அது, கலைகளின் ஸார ரஹஸ்யம், கூச்சத்தைவிட்ட நாம ஸங்கீர்த்தனம் எல்லா ரஸங்களின் ஆனந்தத்தை சேர்ந்தாற்போல் அளிக்கும்.

610. எல்லாப் புண்ய தீர்த்தங்களுக்கும் இந்த ஹரி கதை மணிமகுடம் போன்றது. இது உயர நோக்கிப் பாயும் பரம அமுதத்தின் ஓட்டம். பகவானுக்கு எதிரே ஓடிக் கொண்டு இருக்கிறது. பகவான் மேல் அமுதத் தாரையாக அபிஷேகம் நடந்து கொண்டிருக்கிறது.

611. ஸந்தர்களுடைய முக்கியமான வேலை ஜீவர்களை மோக மாயையாகிற தூக்கத்திலிருந்து எழுப்புவதாகும். அவர்கள் எப்பொழுதும் விழித்தேயிருக்கிறார்கள். மற்றவர்களை எழுப்பு கிறார்கள். ஜீவர்களுக்கு அபயம் அளிக்கிறார்கள். அவர்களுடைய ஏழ்மையை அழித்து ஆனந்தமாகிற பேரரசுப் பதவியில் ஏற்றிவைத்து விடுகிறார்கள்.

612. அடியார்கள் செய்யும் உபகாரம் தாய், தந்தையரிடம் பெறுவதை விட அதிகம். சிறிய, பெரிய நதிகள் தங்கள் தனித்தனி பெயருடனும், உருவத்துடனும் பாய்ந்து சென்று கடைசியில் தனி இருப்பேயில்லாத முறையில் ஒன்று சேர்ந்து விடுகின்றன. அதே மாதிரி மூவுலகத்திலும் உள்ள ஸுக, துக்கங்கள் சான்றோர்களுடைய பேரறிவுக் கடலில் அடங்கிவிடுகின்றன.

613. கண்களைத் திற! திற! என்ன இன்னும் கண்கள் திறக்கவில்லையா? அடே! தாயின் வயிற்றில் கல்லாகவா பிறந்தாய்? இந்த மனித உடல் கிடைத்திருக்கிறதே, இது மிகப் பெரும் நிதியல்லவா? இதை எப்படியெல்லாம் முடியுமோ அப்படி பொருள் நிறைந்ததாக்கிக் கொள். சான்றோர்கள்

உன்னை எழுப்பி, கரையேற்றுவார்கள். நீயும் கரையேறினால் நல்லது. இல்லை யென்றால் உன் விருப்பம்.

614. அநேகப் பிறவிகளில் சுற்றி சங்கடப்பட்ட பிறகு இந்த நர, நாராயணன் இணைப்புக் கிடைத்திருக்கிறது. மனித, உடலாகிற நல்லநிலை கிடைத்திருக்கிறது. நாராயணன் இடத்தில் உன் சித்தத்தை வை.

615. ஏ நண்பா! கேள் உன் நன்மைக்குரிய அடையாளங்களை செல்கிறேன். மனதினால் கோவிந்தனை நினை. வாயால் அவன் புகழ்பாடு. பிறகுகட்டுவாடு ஏது?

616. மனம் செய்வத்தைத் தான் நீ அடைவாய். பயிற்சியினால் ஆகாதது எது?

617. ஸ்ரீ ஹரியின் சரணத்தை அடை. அவருடையவனாக ஆகி வாழ். புகழ் பாடுவதில் ஈடுபடு. ஸம்ஸாரம் ''பூச்சாண்டியாக'' உனக்கு எதிரே வந்திருக்கிறதே அதை விரட்டு. இதே உடலுடன் இந்தக் கண்களாலேயே முக்தியின் ஆனந்தத்தைக் கொள்ளையாக அனுபவி.

618. இரவு, பகலென்று தெரியாமல் அகண்டமான ஜோதி வீசிக் கொண்டிருக்கிறது. இந்த ஸுகத்தை நான் எப்படி வர்ணிப்பேன்?

619. ஸ்ரீ ஹரியின் பிரசாதத்தினால் எல்லா துக்கங்களும் அழிந்துவிடும். இதுதான் பிறவி நோய்க்கு மருந்து. பிறவி, கிழத் தன்மை, வியாதிகள், மரணம் எல்லாமே இதனால் ஓடி விடுகின்றன. அந்த ச்யாமஸுந்தரனின் அழகைக் கண்களால் அள்ளிப் பருகு, கயவர்கள், வஞ்சனை உள்ளவர்கள், காமுகர்கள் போன்றவர்கள் உன்னைத் தொட விடாதே. நாவினால் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை ஜபித்துக் கொண்டிரு.

620. அதிகம் பேசுவதைவிடு. விழிப்புடன் கெட்ட சேர்க்கையைத் தவிர்.

621. இரங்கி பகவானிடத்தில் நான் அநாதை, அபராதி, வேலை தெரியாதவன். மந்தப்போக்குடையவன். அழிவற்ற

ஜடம் என்று சொல். ஏ கருணைக் கடலே! என் அன்னை, தந்தையே! நான் உன்னை நினைவில் வைத்துக் கொள்ளவில்லை. உன் பெயரைச் சொல்லவில்லை. உன் புகழைப் பாடவில்லை. கேட்கவில்லை. என் நன்மையை மறந்து உலகத்திடம் வெட்கம் கொண்டு மரணமடைகிறேன். ஹரிகீர்த்தனம், ஸத்ஸங்கம் இவை எனக்குப் பிடித்ததில்லை. பிறரை நிந்திப்பதில் ஒரு தனி ஸுகம். பிறருக்கு உதவியதில்லை. பிறர் மூலமாகவும் செய்வித்ததில்லை. பிறருக்குத் துன்பம் கொடுப்பதில் சற்றுக்கூட இரக்கம் காட்டவில்லை. தகாத செயல்களைப் புரிந்தேன். கிடைத்தது என்னவோ குடும்பபாரம் தான். தீர்த்த யாத்திரை செய்ததில்லை. இந்த உற்பிண்டத்தை வளர்ப்பதிலேயே கை, கால்களை ஈடுபடுத்தி விட்டேன். பாகவத சேவை செய்ததில்லை. தானம், புண்ணியம் செய்யவில்லை. பகவானுடைய விக்கிரஹத்தை தரிசித்து அதற்கு ஆராதனை செய்ததில்லை. கெட்ட சேர்க்கையினால் அநேக அநியாயங்களையும் அதர்மங்களையும் செய்தேன். என்னை நானே அழித்துக் கொண்டேன். எனக்கே நான் சத்ருவானேன். பகவானே! நீ தயவுக்கு எல்லை. என்னை இந்தப் பிறவிக் கடலிலிருந்து அக்கரை ஏற்றுவாயாக.

622. பிறவிக்கடலை நீந்திக் கடக்காமல் ஏன் வீணே கவலை கொண்டிருக்கிறாய்? அக்கரையில் அதோ அவர் இடுப்பில் கையை வைத்துக் கொண்டு நிற்கிறார். நீ எதை விரும்பினாலும் கொடுப்பவர் அவர் தான். அவர் பாதங்களில் ஒட்டிக் கொள். உலகத்தின் தலைவனான அவர் உன்னிடம் விலை கேட்கமாட்டார். பக்தி ஒன்றினால் அவர் உன்னைத்தோளில் தூக்கிக் கொண்டு செல்வார். பகவான் மகிழ்ந்துவிட்டால் பிறகு புக்திமுக்தி என்ன? முக்தியைப் பற்றிக் கவலையென்ன? அங்கே ஏழ்மையேது? வறுமையேது?

623. ஸம்ஸாரத்தில் இயங்கு. ஆனால் ஹரியை மறக்காதே. அவன் பெயரைச் சொல்லிக் கொண்டே, நியாயமாக எல்லா வேலைகளையும் செய்து கொண்டு செல். இதனால் உலகியல் அனுபவமும், இன்பம் தரும்.

624. ஸுகம் ஒரு தினையளவு. துக்கமோ மலையளவு.

உலகைப் பற்றிய எல்லோரது எண்ணமும் இது தான். தாய், தந்தை, மனைவி, மகன், நண்பன், வேண்டியவன், பணம், சொத்து, அரசன், பேர்ரசன் போன்ற இவர்களில் யாராவது நம்மை மரணத்திலிருந்து காக்க முடியுமா? இந்த உடல் காலனின் உணவு தானே.

625. பைசா, பைசாவாகச் சேர்த்து கோடி ரூபாய் சேர். ஆனால் உன்னுடன் கௌபீனம் கூட வராது.

626. தோழர்கள், நண்பர்கள் எல்லோரும் ஒவ்வொருவராகச் சென்றுவிட்டார்கள். இப்பொழுது உன்னுடைய முறைவரும். கவனமில்லாமல் உட்கார்ந்து இருக்கிறாயே, காலன் தலைமேல் அமர்ந்திருக்கிறான். இப்பொதுதாவது விழித்துக்கொள். இதில் இருந்து தப்ப வழி செய்.

627. உன் உடல் இருக்கப் போவதில்லை. இதை காலன் உண்டு விடுவான். விழித்துக் கொள். இல்லையென்றால் ஏமாந்து விடுவாய். போதை மயக்கத்தின் இடையிலேயே கொல்லப்படுவாய்.

628. பிறருக்கு உதவி செய். பிறரை நிந்தனை செய்யாதே. பிற பெண்களைத் தாயாகவும், தங்கையாகவும் எண்ணு. எல்லாப் பிராணிகளிடமும் (பிராணி மாத்திரத்திடம்) இரக்கம் கொள்.

629. குடித்தனமாகிற இந்த குழப்பத்தில் இருந்து கொண்டே ஒரு கருத்தை மறக்காதே. கணத்தில் அழியக்கூடிய பொருட்கள் மனைவி, பரிவாரம். இவை உன்னுடையவை அல்ல. கடைசி காலத்தில் உன்னுடையது என்று இருப்பது ஸ்ரீ ஹரி ஒன்றுதான். அவரைப் பிடித்துக் கொள்.

630. பகவானை விரும்பினால் சித்தத்தில் கலக்கம் கொள்ளாதே. அபிமானம், விறைப்பு, சோம்பல், தயக்கம், சஞ்சலம், துர்நடத்தை, மனதில் கறை ஆகிய குப்பை கூளங்களை எதற்காகச் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கிறாய்? வெளிவேஷம் மட்டும் போடுபவன் பக்தனாக மாட்டான்.

631. நீ போடுகின்ற வேஷத்தை நெருப்பில் போடு.

உள்ளே கருமை இருக்கிறது. புடவையைச் சுற்றிக் கொண்டு வயிற்றை பெரிதாகக் காட்டி பிள்ளைத தாய்ச்சியாய்



இருக்கிறேன் என்று வீண் வதந்தியைக் கிளப்பிவிட்டு குழந்தைக்குப் பால் கொடுப்பேன் என்றெல்லாம் சொல்வதனால் குழந்தையா பிறக்கும்? ஊர் சிரிக்கும் அவ்வளவு தான்.

632. புலன்களில் அடக்கமில்லை. நாக்கில் ஹரிநாமமில்லை. இந்த வாழ்க்கை சாப்பாட்டுடன் ஈயைச் சாப்பிடுவது போல் தான் இருக்கிறது. இப்படிப்பட்ட உணவு எங்கேயாவது ஸுகம் தரமுடியுமா?

633. உலகில் ஆசைகள், அபிலாசைகள் அனைத்தையும் விடாமல் பகவான் கிடைக்க மாட்டார்.

634. எவர்கள் உயிருடனும் உள்ளத்துடனும் பகவானை விரும்புகிறார்களோ, அவர்கள் தங்களுடைய அன்பை கவனமாகக் காத்துக் கொள்ளட்டும். பெருமையை 'பன்றி விட்டையாக' எண்ணட்டும். வீண் வாதங்களில் ஈடுபட வேண்டாம். கர்வம் பிடித்த தர்க்கம் செய்கின்றவர்களுடைய சேர்க்கையிலிருந்து தொலைவில் இருக்கட்டும். எந்தவித வேஷமும் போட வேண்டாம்.

635. போலித்தனத்தினால் பகவான் கிடைக்கமாட்டார். தூய அன்பில்லாமல் எதைச் செய்தாலென்ன? அதெல்லாம் வீண் அழுகை தான்.

636. ஒவ்வொரு பொருளின் பிடிப்பும் ஒவ்வொரு மாதிரி மனதை அவைகளிடையே பங்கிட்டுத் திரியாதே. உன் நம்பிக்கையை விடாமல் பிடித்துக் கொள். மற்றவரைப்போல் ஆக விரும்பாதே.

637. எல்லா விதத்தாலும் சமரசமாயிருக்கின்றவர்களை அண்டு, அவர்கள் தான் உனக்கு உறவினர்கள். வாதம், பிரதிவாதம் செய்யத் தொடங்கினால் சுருக்கில் மாட்டிக் கொள்வாய்.

638. பக்தர்களின் கூட்டத்தில் கிடைக்கின்ற இன்பத்தின் சுவையை நம்பிக்கையற்றவன் பெறமாட்டான். அவன் சோற்றில் பருக்கைக் கல்போல் தனியாகவே இருப்பான்.

639. பகவானை வழிபடும்போது உத்தமமான மனதுடன் வழிபடு. அங்கே வெளித்தோற்றத்துக்கு என்ன வேலை? நீ யாரை அறிய விரும்புகிறாயோ, அவர் உன்னுடைய மனதை அறிவார். உண்மைகளுக்குள் எல்லாம் அவர் தானே உண்மை.

640. பக்தியின் தன்மையே மற்ற எல்லாவற்றையும் கைகழுவி விடுவதுதான்.

641. கண்களில் அன்பு நீரில்லை. இதயத்தில் துடிப்பில்லை. பிறகு என்ன பக்தி? இது பக்தியின் போலி. அர்த்தமற்ற மனமகிழ்ச்சி பார்வையுடன் பார்வை சேராத வரையில் இணைப்பு ஏற்படாது.

642. அகந்தை அழியட்டும். தெய்வத்தைத் துதிப்பதிலும், பாடுவதிலும் உண்மையான பக்தியிருக்கட்டும். இதயத்தில் உண்மையான ஈடுபாடு இருக்கட்டும். ஹரியின் திருவடிகளில் நம்பிக்கை முழுமையாக இருக்கட்டும். அப்பொழுது தான் செயல் பயன்பெறும்.

643. சேவகனின் உடலில் உயிர் இருக்கும்வரை சுவாமியின் கட்டளையே அவனுக்குப் பிரமாணம்.

644. பகவானுக்குரியவனாக இரு. சற்றே ஞானம் பெற்று வல்லடி வழக்குச் செய்யக் கூடிய தார்க்கிகர்களை விட அறிவு. படிப்பு இல்லாதவர்கள், கள்ளம் கபடமற்றவர்கள் நல்லவர்கள் அசடர்கள் நல்லவர்கள். படித்த வாய் வம்புக்காரர்கள் எதற்கும் பயன்பட மாட்டார்கள்.

645. பகவானுக்காக எதையும் கைகழுவத் தயாராயிரு. ஆனால் அது பூர்வ, புண்ணியம் இல்லாமல் கிடைப்பதில்லை.

646. இந்த உலகத்தில் நீ வந்துவிட்டாய். இப்பொழுது கிளம்பு. விரைந்து அந்த பேரருளாளரான ப்ரபுவின் பாதங்களைச் சென்றடை. இந்த உடல் தேவதைகளுடையது. அனைத்து ஆஸ்தியும் குபேரனுடையது. இங்கே மனிதனுடையது என்று என்ன இருக்கிறது? கொடுக்கிறவன், கொடுப்பிக்கிறவன், அழைத்துச் செல்பவன், வேறு யாரோ, இங்கே என்ன வைத்திருக்கிறது? ஏ அசடே! ஏன் வீணாக அழியும் பொருளுக்காக பகவானுக்கு முதுகைக் காட்டுகிறாய்? (அவரைப் பார்க்காமல் பின்புறம் திரும்பிக் கொள்கிறாய்)

647. எம்பெருமான் கொடுத்த புலன்களை, அவனது தொண்டில் ஏன் ஈடுபடுத்தாமல் இருக்கிறாய்? வாயால் ஹரி கீர்த்தனையைப் பாடு. காதுகளால் அவன் புகழைக்கேள். கண்களால் அவன் உருவத்தைப் பார். இந்தப் புலன்கள் அதற்காகவே தான்.

648. ஏ மானம் கெட்டவனே! உலகச் சுமையைத் தலையில் ஏந்தி, ஓடுவதில் இன்பம் காண்கிறாய். இந்த உலகியல் வாழ்வில் எருதைப்போல் இந்தச் சுமையைத் தூக்குவதில் ஏன் களியாட்டம் போடுகிறாய்?

649. பிறர் பொருள், பிறர் மனைவியிடம் இச்சை எங்கே ஏற்பட்டதோ, அங்கேயிருந்தே பாக்யத்தில் வீழ்ச்சி ஆரம்பித்து விட்டது.

650. பிற மங்கையும், பிறர் சொத்தும் மிகப் பொல்லாதவை. பெரிய பெரிய மனிதர்கள்கூட இவற்றின் வட்டத்தில் முற்றிலுமாக அழிந்திருக்கிறார்கள். இவ்விரண்டையும் விட்டுவிடு. இறுதியில் இன்பம் ஏற்படும்.

651. ஸ்ரீ ராமன், கிருஷ்ணன் இப்பெயர்களை நேர்மையாகச் சொல். அந்த கருநிறக் கண்ணனை மனதால் எண்ணு.

652. வயிற்றில் சோறு இல்லாதபோது உடலை அலங்கரிப்பதில் என்ன அழகிருக்கிறது? அதேபோல் ஹரியிடம் அன்பில்லாமல் ஞானம் எதற்கும் ஆகாது.

653. ஸ்ரீ ஹரி, கோவிந்தன் என்ற பெயர்களில் ஈடுபாடு ஏற்பட்டவுடன் இந்த உடல் கோவிந்தனுடையதாக ஆகிவிடும். அவரிடத்தில் மறைப்பது, வித்தியாசம் பாராட்டுவது ஒன்றும் இருக்காது போய்விடும். மனம் மகிழ்ச்சியினால் துள்ளும், கண்களில் அன்பு நீராய் வழியும். புழு, குளவியான பிறகு புழு என்று தனித்திருப்பதில்லை. நீயும் பகவானிடத்திலிருந்து பிரிந்திருக்க மாட்டாய்.

654. கூச்சப்பட்டு இவ்வளவு ஏன் சிறியவனாய் ஆகிவிட்டாய்? ப்ரம்மாண்டத்தையே ஆசமனம் செய்துவிடு. பாரணையைச் செய்துவிட்டு உலகுக்குக் கைகழுவி விடு. ஏற்கனவே நேரம் ஆகிவிட்டது. இன்னும் தாமதம் செய்யாதே.

655. சாஸ்திரம் எதை விட்டுவிடச் சொல்கிறதோ, அது அரசாகவேயிருந்தாலும், அதை உலர்ந்த புல்லைப்போல் உதறிவிடு. சாஸ்திரம் எதை ஏற்றுக் கொள்ளச் சொன்னாலும், அது நஞ்சாகவே இருந்தாலும் அதை ஏற்றுக்கொள்.

656. எவ்விதம், கண்ணுள்ளவன் சரியான பாதையில் தானும் சென்று, கண்ணில்லாதவனையும் அழைத்துச் செல்கிறானோ, அவ்விதமே அடியார்கள் தாங்களும் தர்மத்தை

நடத்தி, அறியாதவர் களுக்கும் அதன் தத்துவத்தைப் போதிக்கிறார்கள்.

657. அருளாளர்கள் மலைஉச்சியில் நின்று கொண்டு, ''பகவானின் பாதங்களைப் பற்று. உயிர்களை வழிபடுவதன் மூலம் அவனுக்கு பஜனை செய். பசு, கழுதை, யானை, நாய் எல்லாவற்றிற்கும் ஒரே தன்மையுள்ளதாக வணக்கம் செலுத்து'' என்று கூவிச் சொல்கிறார்கள்.

658. பிறப்பின் காரணத்தினால் தாயின் (பெண்ணின்) சேர்க்கை ஏற்படுகிறது. அதைத்தவிர எவன் பெண்ணின் உடலை வாழ்நாள் முழுவதும் தொட்டிருக்க மாட்டானோ, அவனே சுத்த ப்ரம்மசாரி எனப்படுகிறான்.

659. ஏ ஜீவனே! மேலேறிச் செல். சென்று கொண்டேயிரு. இல்லையென்றால் மாயை நதியில் முழுகி அடித்துச் செல்லப் படுவாய். ஏ அன்பனே! இந்தப் பிறவியெனும் பேராறு வேகமாக இழுக்கிறது. பெரிய பெரிய நீச்சல் வீரர்களைக் கூடத் தூக்கி அடித்துவிடுகிறது. இந்த உலகம் கணத்தில் அழியக் கூடியது. இதில் ஒரு நம்பிக்கையும் வைக்க முடியாது. கிடைத்தற்கரிய இந்த மனித உடல் போய்விட்டால் நீ பின்னால் வருந்துவாய்.

660. சென்றதை நினைக்காது. வருவதை விரும்பாது. உள்ளே மேருவைப்போல அசையாமலிப்பவன், உள்ளத்தில் நான், நீயென்று எண்ணுவதை மறந்தவன் அவனே நிரந்தர சன்னியாசி.

661. இடையறாது நற்பழக்கங்களில் ஈடுபடு. சித்தத்தைப் பரம புருஷனுடைய வழியில் போகவிடு. இடையில் இந்த உடலிருக் கட்டும் அல்லது இல்லாது போகட்டும்.

662. தன்னுடைய பூஜிக்கப்படும் தன்மையைத் தன் கண்ணால் பார்க்காதவன். தன்னுடைய கீர்த்தியைத் தன் காதுகளால் கேட்காதவன். மக்கள் இவன் என்று சுட்டிக் காட்டும்படி எதையாவது செய்யாதவன், தேவகுருவைப் போல் எல்லாம் அறிந்தும்கூட, அறியாதவன் போல் புகழிடத்தில் பயத்தினால் ஒதுங்கி இருப்பவன். தன்னுடைய திறமையை

மறைப்பவன், பெருமையை மறைப்பவன், தன்னுடைய பித்துக் குணத்தை மக்களுக்குக் காட்டுபவன் என்ற நிலையில் நீ இரு.

663. உதைக்கும் பசு, தன்னுடைய பாலை மறைக்கிறது. வேசி தன் வயதை மறைக்கிறாள். நற்குலத்து நங்கை தன் அங்கங்களை மறைக்கிறாள். அவ்விதமே நீயும் உன்னுடைய நற்கருமங்களை ஒளித்து விடு.

664. தாமரையின்மேல் வண்டு காலை வைக்கும் பொழுது மிகவும் மென்மையாக வைக்கிறது. பூவின் கேசரங்கள் (மெல்லிதழ்கள்) நசுங்கிவிடுமோ என்ற பயம். அதேபோல் பரமாணுவைப்போல உயிரினங்கள் எங்கும் நிரம்பியிருக்கிறது என்று அறிந்து ஸாது மஹாத்மா தயவு கொண்டு பூமியின் மேல் மென்மையாகக் காலை வைக்கிறார். எல்லாப் பிராணிகளுடையவும் பாதங்களின் கீழே தன்னுடைய இதயத்தை விரிக்கிறார்.

665. ஸாதுக்களால் சகித்துக் கொள்ள முடியாதது என்று ஒன்றும் கிடையாது. அவர் சகித்துக் கொள்வதை நினைவில் வைத்துக் கொள்வதுகூட இல்லை.

666. ஸாதுக்களுக்கு தம்மவர், அயலார் என்று ஒன்றும் கிடையாது. உலகம் அனைத்துடன் அவருக்கு நெடுங்கால உறவு உண்டு. எல்லோரையும் அவர் அறிவார். காற்று நேராக அடிப்பதுபோல் அவருடைய எண்ணமும் எளிமையாக இருக்கிறது. அதில் ஐயமோ, எதிர்பார்ப்போ இருப்பதில்லை.

667. அம்மாவிடம் செல்ல எப்படிக் குழந்தைக்குக் கூச்சமோ, தடையோ இருப்பதில்லையோ, அதேபோல் ஸாதுக்களுக்கு மக்களுக்குத் தம் மனதைத் தருவதில் ஐயம் இருப்பதில்லை. அதில் அவர்களுக்கு மூலை முடுக்குகள் கிடையாது. அவர்கள் பார்வையில் வஞ்சனையிருப்பதில்லை. பேச்சில் சந்தேகம் இருப்பதில்லை. அவர்களுடைய பத்துப் புலன்களும் எளிமையாக, சூழ்ச்சிகளை எண்ணாதவைகளாக, தூய்மையாக இருக்கின்றன. அவர்களுடைய பஞ்சப் பிராணன்களின் தரம் எட்டு யாமமும் விடுபட்டேயிருக்காது.

668. ஓடுகின்ற மேகங்களுடன் சேர்ந்து ஆகாயமும்

ஓடுவதில்லை. அதேபோல் இயங்கும் உயிருடன் சேர்ந்து ஸாதுக்களின் உயிர்களும் ஓடுவதில்லை. அது துருவத்தைப்போல நிலையாக இருக்கிறது.

669. சமுத்திரத்தில் கங்கையின் நீர் ஏற்கெனவே சேர்ந்திருக்கிறது என்றாலும், மேலும் மேலும் சேர்ந்து கொண்டேயிருக்கிறது. அவ்விதமே மஹாத்மாக்கள் தெய்வ ஸ்வரூபமாக இருந்தும்கூட மேலும் மேலும் பகவானுக்கு எல்லாவற்றையும் தந்து அவனைப் பூஜிக்கிறார்கள்.

670. எவர் தீர்த்தங்களில், தூய நீர்க் கரைகளில், அழகிய தபோவனங்களில், மேலும் குகைகளில் வசிப்பதை விரும்புகிறாரோ, எவருக்குத் தனித்திருப்பதில் இஷ்டமிருக்கிறதோ, மேலும் மக்கள் குடியிருக்கும் இடங்களில் மனது ஈடுபடாதிருக்கிறதோ, அவரை ஞானத்தின் மனித உரு என்று அறி.

671. ஐந்து தத்துவங்களால் இந்த உடல் ஏற்பட்டது. பிறகு கர்மங்களின் குணங்களால் (குணத்துக்குக் கயிறு என்ற பொருளும் உண்டு) கட்டுப்பட்டு பிறப்பு, இறப்பு என்கின்ற நச்சு வட்டத்தில் சுழன்று கொண்டிருக்கிறது. கால நெருப்பின் குண்டத்தில் இது வெண்ணெய் ஆகுதி. ஈயின் சிறகுகள் அசையத் தொடங்கியவுடனேயே அது அழிந்து விடுகிறது. இதே நிலைதான் உடலுடையதும்.

672. பகவான் அன்பு, ஸுகம், அமைதியின் இல்லம், அவருடைய சொரூபமும் அவை தான்.

673. ஆற்றல் இருக்கிறது. புத்தி இருக்கிறது. சுதந்திரமும் இருக்கிறது. இருந்தும் மற்றவரைப் பார்த்து நன்மை தரும் அறப்பாதையை அலக்ஷியம் செய்து, தீமை தரும் அதர்மப் பாதையில் செல்வது உள்ளத்தின் பலவீனமாகும்.

674. எதிரியானாலும் நொந்து வந்தால் உடலாலும், மனதாலும், சொல்லாலும் அவனுக்கு உதவி செய். அவனைத் திருப்பி அனுப்பி விடாதே. மரம் தன்னுடைய பூ, பழம், நிழல், வேர், இலை எல்லாவற்றையும் தன்னிடம் வருகின்ற

வழிப்போக்கனுக்கு எதிரே எடுத்து வைப்பதில் தவறுவதில்லை. அப்படியே களைப்படைந்த வழிப்போக்கன் ஒருவன் தேவை காரணமாக வந்து சேர்ந்தால் நீ உன்னுடைய பணம், தானியம் இவற்றைக் கொண்டு அவனுக்கு உபயோகமாகயிரு. இதைத்தான் தானம் என்று சொல்கிறோம்.

675. அனைத்தையும் கொடுப்பதே தானம். பொருளைத் தனக்காகச் செலவழிப்பது, அதை வீணாக இழப்பதாகும். மருந்து பிறருக்குப் பயனை அளித்து, தான் உலர்ந்து விடும். அதேபோல், ஏ வீரனே! சொருபத்தையடைவதற்காக உயிரையும், புலன்களையும், உடலையும் தேய்த்துக் கொள்வது தான் தவமாகும்.

676. நம் குணங்களால் மற்றவர் குற்றங்களை நீக்கிவிட்டு அவர்கள் பக்கம் பார்க்க வேண்டும்.

677. ஸாத்விகமான ஞானம் எதுவென்றால், எதில் அந்த ஞானத்துடன் அறிபவனும் அறியப்படுபவனும் உள்ளத்தில் ஒன்றாகி விடுகிறார்களோ அதுதான். சூரியன் இருட்டைப் பார்ப்பதில்லை. நதிகள் கடலைக் காண்பதில்லை. நம்முடைய நிழலை நாம் பிடிக்க முடியாது. அப்படியே எந்த ஞானத்திற்கு சிவனிலிருந்து புல் வரையில் தன்னைவிட்டுத் தனித்துக் காணப்படுவதில்லையோ, அதுவே ஸாத்விகமான நற்பொருள் பொதிந்த ஞானமாகும். அது விடுதலைத் திருவின் வீடு.

678. ஸாதாரண அரசனுடன் தூங்குகின்ற தாசி கூட அரசனுக்குச் சமமான எண்ணங்கொண்டு அகந்தை கொள்கிறாள். நானோ உலகை ஆளுபவன். என்னுடன் கூடின பிறகுகூட ஜடஸம்பந்தம் விடாது என்று எப்படிச் சொல்ல முடியும்? இப்படிப்பட்ட அசட்டுப் பொய்யை என் காதுபடச் சொல்லாதே.

679. இரண்டு கண்ணாடிகளை எடுத்து ஒன்றுக்கெதிரே மற்றொன்றை வை. இப்பொழுது சொல்! எது எதைப் பார்க்கிறது?

680. குழந்தைகள் பூச்சாண்டிக்குப் பயப்படலாம். ஞானிகள் மரணத்துக்கு அஞ்சுவதில்லை.

681. பழத்தைக் கொடுத்துவிட்டுப் பூ காய்ந்து விடுகிறது. பழம் ரசம் விளைந்தவுடன் அழிந்து விடுகிறது. ரசம் திருப்தியைக் கொடுத்துவிட்டுத தானில்லாமல் போய்விடுகிறது. ஆகுதியை அக்னியில் சேர்த்துவிட்டு கை நகர்ந்து விடுகிறது. பாசுரம் மகிழ்ச்சி கொடுத்துவிட்டு மௌனமாகிவிடுகிறது. அவ்விதமே ஸச்சிதானந்த நிலை காண்பவனைக் காட்டிவிட்டு மௌனமடைந்து விடுகிறது. (காண்பவன் = ஆத்மா)

682. தெய்வத்தின் வாசலில் சற்று நேரமாவது நில்லேன்.

683. நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், பதினெட்டுப் புராணங்கள் எல்லாமே ஹரியின் புகழைத்தான் பாடுகின்றன.

684. பகலும், இரவும் இந்த உலகியல் வேலைக்காகவே இவ்வளவு கஷ்டப்படுகிறாய். பகவானை ஏன் வழிபடுகிறாயில்லை?

685. ஜபம், தவம், தர்மம் எல்லா சிரமமும் ஹரியில்லாமல் வீண்.

686. யாருடைய நாக்கு ஹரி, ஹரி, ஹரி என்ற மந்திரத்தை ஜபிக்கிறதோ, அவனுக்கு மோக்ஷம் கிடைக்கும்.

687. நாராயணனே ஜபங்களின் ஸாரம். இதற்கு சாஸ்திரங்கள் பிரமாணம். இப்படி வேத வாக்கியமேயிருக்கிறது.

688. நம்பிக்கையை விடாதே. சந்தேகத்தை விட்டுவிடு. தொண்டை கிழிய ராமனையும், கண்ணனையும் கூப்பிடு.

689. ஒரு பகவந்நாமத்தின் தத்துவத்தை மனதில் உறுதி செய்து கொள். ஹரி உனக்குத் தயைபுரிவான்.

690. ராமன், க்ருஷ்ணன், கோவிந்தன் என்ற பெயர்கள் எளிமையானவை. நாத்தழுதழுக்க இதை ஜபி.

691. நாமத்தை விட வேறு தத்துவம் ஒன்றும் கிடையாது. வேறு வழிகளில் சுற்றித் தடுமாறாதே.

692. ஹரியில்லாமல் இந்த உலகம் பொய்யான நாடகம் வீணில் வருவதும், போவதுமாகும்.

693. நாம மந்திரத்தை ஜபிப்பதனால் கோடி பாவங்கள் தொலையும். க்ருஷ்ணன் பெயரை உறுதியாகப் பிடித்துக்கொள்.

694. இடைவிடாது ஹரியை த்யானிப்பதால் வினைகளின் கட்டெல்லாம் அறுந்துவிடும். ராமன், க்ருஷ்ணன் என்ற பெயர்களை உச்சரிப்பதால் எல்லா தோக்ஷங்களும் திசை தெரியாது அப்பால் ஓடியே விடும்.

695. ஹே கோபாலா! ஹே ஹரி! மூன்று உலகுக்கும் உயிரே! என் மனம் உன்னுடைய த்யானத்திலேயே லயித்திருக்கட்டும். ஒருகணம் கூட அது சும்மாயிருக்கக் கூடாது.

696. உடலும், மனமும் உன்னுடைய பாதங்களுக்கு அணிகளாக இருக்கின்றன. ருக்மணியின் கணவன் என்னுடைய தந்தை. நான் வேறொன்றும் அறியமாட்டேன்.

697. ஹரி முதலும் இருக்கிறார். கடைசியிலும் அவரே. எல்லா பூதங்களுள்ளும் வியாபித்திருக்கிறார். ஹரியை அறி. ஹரியைப் பேசு. அவரே என் தாயும் தந்தையும்.

698. இதயத்தில் நிராகாரமான பகவானின் தியானம்; கண்களில் ஈச்வர லீலைகளின் காட்சி; நாக்கில் ராம நாம ஜபம். இவ்வளவு இருந்துவிட்டால் பின் செய்ய என்ன இருக்கிறது?

699. ஸ்ரீ ராமனின் பெயரைச் சொல். இது உயிர்தரும் ஒளஷதம்.

700. யாருக்கு எங்கும் புகலில்லையோ, அவனுக்கு ஒரே உதவி ராம நாமம் தான்.

701. 'அலக்' 'அலக்' (காண முடியாத தெய்வ சக்தி) என்று ஏன் பிதற்றித் திரிகிறாய்? முக்திக்கு ஒரே உபாயம் ராம நாமம். அதைச் சொல்வாயாக.

702. அநேகப் பிறவிகளில் கெட்டுக் கிடப்பது இப்பொழுதே திருந்திவிடும். ஒரே நிபந்தனை. நீ தீய சேர்க்கையைவிட்டு ராமனுடையவனாக ஆகி ராம நாமத்தைச் சொல்.

703. ராம நாமஸ்மரணம் செய்வதால் எல்லா ஸித்திகளும் கிட்டும். ஒவ்வொரு அடியிலும் பரமானந்தம் ப்ராப்தமாகும்.

704. எனக்கு ராமனின் உதவி, ராமனின் பலம், ராம நாமத்தில் நம்பிக்கை இருக்கட்டும். ஆனந்தமாக நான் ஸ்ரீ ராம நாமஸ்மரணம் செய்யவேண்டும். இம்மை, மறுமை இரண்டையும் ஆக்குகின்றது ஸ்ரீ ராம நாமமே.

705. ஸ்ரீ ராமனை எண்ணியவுடனே பக்தியால் உருகாத இதயம் கிழிவதே நன்று. கண்ணீர் விடாத கண்கள் குருடாவது நன்று. புளகமடையாத உடல் எரிவது நன்று.

706. ஹரியின் நற்கீர்த்தியைக் கேட்டு எந்தக் கண்களில் அன்புக்கண்ணீர் ததும்பி வராதோ, அந்தக் கண்களில் ஒரு பிடி மணலை அள்ளிப்போடு.

707. ஏ மனமே! வேறு எதிலும் ருசி காணாதே. ஹரி என்ற பெயரில் ரசம் பெறு.

708. உன்னைப் (பகவானை) பெற்று விட்டேன். பிறகு ஏன் மற்றவர் எதிரே கை நீட்டுவேன்? நான் ப்ரபுவின் ஆள். உலகத்திடம் ஏன் பிச்சை கேட்க வேண்டும்?

709. கிடைத்ததைக் கொண்டு திருப்தி, ஹரியின் சரணங்களில் ப்ரீதி. இதற்கு மேலே ஸுகம் என்பது என்ன?

710. வாழ்க்கைக்காக எவன் கவலைப்படுவதில்லையோ, வீணான வலை பின்னுவதில்லையோ, அவனே உண்மையான நம்பிக்கை உள்ளவன்.

711. தூய உள்ளம் இல்லாதவன் செய்யும் ஒரு செயலும் தூயதாய் இருக்காது.

712. எந்தக் கண்கள் ஈச்வரனின் அடிமையாகிக் கிடத்தலே நல்லது என்று எண்ணவில்லையோ, அவைகள் அவிந்து விடுவதே நல்லது. எந்த நாக்கு ஈசனைப் பற்றிப் பேசாதோ, அது பேச முடியாமலே போவது நல்லது. உண்மை கேட்காத காதுகள் செவிடாகி விடுவது நல்லது. ஈசன் சேவையில் இயங்காத உடல் இல்லாமல் போவதே நல்லது.

713. பிறவிக்கு முன்னால் ஈசனுக்கு நீ எவ்வளவு அன்புடைய வனாயிருந்தாயோ, அப்படியே இறக்கும்வரையில் இருப்பதற்குச் செயலாற்று.

714. பணம், சொத்து இவற்றின் பின்னே ஏன் ஓடுகிறாய்? உன் தேவையை நிறைவேற்றி. உன்னைக் கவனித்துக் கொள்ள ஈசனே தன்மேல் பொறுப்பை ஏற்றுக் கொண்டு இருக்கிறான். அவனை நம்பினால் எல்லாவிதத்திலும் அமைதியும், இன்பமும் பெறுவாய்.

715. அழியும் இந்த உலகில் எவன் ஆசை வைக்க மாட்டானோ, அவனே அனுபவம் பெற்ற முனிவன் (ரிஷி). மனதை ஈடுபடுத்தி ஈசனின் புகழ் பாடுதல், பித்தேறி அவன் பாட்டைக்கேட்டால், ப்ரபுவுக்கு அடிமையாக இருந்து வேலை செய்தல் -இவை மஹான்களின் தர்மம்.

716. கழுவாய்க்கு மூன்று படிகளுண்டு. முதல்படி உளமார வருந்துதல். இரண்டாம்படி மீண்டும் பாவம் செய்யமாட்டேன் என்று உறுதி எடுத்துக் கொள்ளுதல், மூன்றாவது ஆத்ம சுத்தம்.

717. ப்ரபுவின் வழியில் உயிரையே விடுவதற்குத் தயாராக இல்லையென்றால் அவரிடத்தில் அன்பு இருக்கிறது என்று சொல்லக் கூடாது.

718. ஈசனில் ஆழ்ந்திருத்தலே உள்ளத்தின் அழிவாகும்.

719. ஈசன் தரிசனத்தினால் அந்தக் கரணத்தில் எழும் ஒருகண உற்சாகத்தில், ஸ்வர்கத்தின் லக்ஷக்கணக்கான கோயில்களுக்குச் செல்வதால் கிடைக்கும். இனிமையைவிட அதிக இனிமையிருக்கிறது.

720. உண்மையான ஸாது வெளியிலே பார்க்க மௌனமாய் இருப்பார். ஆனால் அப்போது உள்ளேயே ஈசனுடன் பேசிக் கொண்டிருப்பார். கண்கள் மூடியிருக்கும் ஆனால் அவர் ஈசனின் பெருமையையும், அழகையும் கண்டு களித்துக் கொண்டிருப்பார்.

721. நீ வேண்டுமானால் கால்நடையாக நடந்து சென்று கொண்டிப்பாய். ஆனால் உனது மனதின் மீது சாவாரி

செய்கின்ற சிந்தனைகளாகிய பாரமூட்டை இருந்து கொண்டே இருக்கும்.

722. ஈசனை அறிந்தும், அவனிடம் அன்பு கொள்ளாதிருப்பது முடியாதது. அன்பு கலவாத பரிச்சயம் (அறிமுகம்) பரிச்சயமே அல்ல.

723. ஈசன் யாரிடம் மகிழ்கிறானோ, அவனுக்கு நதியைப் போன்ற வள்ளல் தன்மையும், சூரியனைப் போன்ற பெருந் தன்மையும், நிலம் போன்ற பொறுமையையும் கொடுக்கிறான்.

724. இந்த வாதம், விவாதங்களெல்லாம் சொல்லின் படாடோபங்கள், அகந்தை, மமதையெல்லாம் படுதாவுக்கு முன்பு நடப்பவை. ஆனால் திரைக்குப் பின்னால் மௌனம், நிலைப்பேறு, அமைதி, ஆனந்தம் இவையே நிரம்பி இருக்கின்றன.

725. ஸாதனைக்காக (பரகதிக்கான நோன்புக்காக) என்ன செய்ய வேண்டுமோ செய். என்றாலும் அதில் ஈச்வரனுடைய பரமகிருபை வேலை செய்கிறது என்று அறிந்து கொள். உன்னுடைய பலம் அதில் இல்லை.

726. ஈசன் அருகில் வந்தவனுக்கு என்ன குறை? எல்லாப் பொருட்களும், சொத்தும் அவனிடம் வந்துவிட்டன. ஏன் என்றால் அவனுக்கு இனிய நண்பனான ஈசன் எங்கும் உள்ளவன். எல்லா சொத்துக்கும் உரியவன்.

727. நான் ஈசனை அறிந்தவன் என்று தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்பவன் வீண் கர்வமுள்ளவன். அவனை அறியவில்லையே என்று சொல்பவனே உண்மையான அறிவாளி.

728. இந்த உலகம் உனக்குத் தன்னுடைய சொத்தையும், உரிமையையும் கொடுத்துவிட்டாலும்கூட நீ பெருமை கொள்ளாதே. அவ்விதமே எவ்வளவு வறுமையை உனக்குத் தந்தாலும் அப்பொழுது அதனிடம் கோபம் கொள்ளாதே. எந்த நிலையில் நீ இருந்தாலும் ஈசனுக்குப் பணிவிடை செய்வதைக் கடமையாக நினைத்திரு.

729. எந்த மனிதன் உலகியல் ஆசைகள் வசப்பட்டு ரிஷி முனிவர்களின் இதயவாசியான ஹரியின் குரலை அவமதிக்கிறானோ அவனுக்கு துக்கமாகிற, அவமானமாகிற மயான பூமியில் எரிய நேரிடும். எவன் புலன்களையும், போக ஆசைகளையும் வலிவிழக்கச் செய்து உலகப் பொருட்களில் இருந்து ஒதுங்கியிருக்கிறானோ, அவன் உண்மை. ஸுகம், அமைதி ஆகிற சால்வையைப் போர்த்திக் கொண்டு புகழ் எனும் உலகில் ஹரியின் மடியில் சென்று அமர்கிறான்.

730. ஈசனை அறியும் இதயம் தெளிவான கண்ணாடிக்குள் எரியும் விளக்குப்போன்றது. அதன் ஒளி எங்கும் பரவுகிறது. பிறகு அதற்கு என்ன அச்சம்?

731. இவ்வளவு எண்ணற்ற விண்மீன்களையும், ஆகாய மண்டலத்தையும் படைத்தவரின் கண்கள், நீ எங்கிருந்தாலும்



அங்கும் இருக்கும். இதை மனதில் எண்ணி எப்பொழுதும் விழிப்புடன் தூயவனாக இரு.

732. எந்தெந்தப் பொருட்களினால் ஈசன் கிடைக்கிறான்? பேசாத்தன்மை, கேளாத்தன்மை, காணாத்தன்மை இவற்றின் மூலம் கிடைப்பான். ப்ரபு, இல்லாமல் நீ எதுவும் பேசாதே, கேட்காதே, பார்க்காதே.

733. மனிதனின் உண்மையான கடமை என்ன? ஈசன் தவிர வேறு எந்தப் பொருளிடமும் அன்பு கொள்ளாதிருப்பதே.

734. ஈசன் பூஜையிலும், பஜனையிலும் எவன் உலகின் மற்ற எல்லாப் பொருட்களையும் மறக்கிறானோ, அவனுக்கு அந்த எல்லாப் பொருட்களிலும் ஈசன் காட்சி தருவார்.

735. எல்லா நிலைமைகளிலும் ப்ரபுவுக்கும், ப்ரபுவின் பக்தர்களுக்கும் அடிமையாகி இருத்தலே தூய ஒருமுகமான பக்தியாகும்.

736. தனக்கு இனியவனைப் பற்றிக் கேட்பது, நினைப்பது, பாடுவது முதலியவற்றுக்கு எவை தடங்கல்களோ, அவற்றை விலக்குவது ஈசன்பால் கொண்ட உண்மையான அன்பின் அடையாளம்.

737. உள்ளே ஆழமாக ப்ரபுவுக்கு பக்தி செய்தல், ஆனால் அது வெளியே தோன்றாமல் பார்த்துக் கொள்ளுதல் - இவை ஸாதுத்தன்மையின் முக்கிய அடையாளமாகும்.

738. ஈசன் உபாஸனையில் மனிதன் ஆழங்கால் படப்பட அவனைக் காண விருப்பம் அதிகமாகி வரும். ஒரு கணத்திற்காவது ப்ரபு ப்ரத்யக்ஷம் ஆகிவிட்டால் மேலும் மேலும் அந்த நிலையைப் பெற அவன் விரும்புவான்.

739. எந்த ஸாதகன் ஆயிரம் வீடுகள் பெறும் சொத்தில் ஆசை காட்டப்பட்ட போதிலும், ஆசைப்பட மாட்டானோ அவனே ஈசனைப் பற்றிப் பேசத் தகுதியுள்ளவன்.

740. எந்த ஸாதகன் மனதில் களங்கமில்லாமல் உலகின் வலைகளிலிருந்த விடுபட்டு உலக த்ருஷ்ணையைத்

திரும்பியும் பார்க்க மாட்டானோ, அவனே உண்மையான ஸாது.

741. ஸாதுவுடன் சேர்ந்த எவனுமே ஈசனை அடைய முடியும்.

742. என்னுடைய நாக்கு அந்த இரண்டற்ற ஈசனின் மகிமையையும், குணத்தையும் எப்போது பாடத் தொடங்கிற்றோ அப்பொழுது நான் இப்பூவுலகும், ஸ்வர்கலோகமும், என்னைச் சுற்றி வருவதைக் கண்டேன். மற்றவர்கள் இதைக் காணவில்லை.

743. எவன் இதயம் ஈசனை அடையத் துடித்துக் கொண்டிருக்கிறதோ, அவன் பிறப்புப் பாராட்டுக்குரியது. அவன் தாய் பாராட்டுக்குரியவள். ஏனென்றால் அவனுடைய எல்லாமே ஈசனுள் அடங்கியிருக்கிறது.

744. எந்த மனிதன் தெய்வத்துள் அடங்கியிருக்கின்றானோ, கேட்பதற்கும், பார்ப்பதற்கும் ஈசனே தகுந்தவன் என்று எண்ணுகிறானோ அவன் பார்க்க வேண்டியதையெல்லாம் பார்த்து விட்டான். எல்லாம் கேட்டு விட்டான். எல்லாவற்றையும் அறிந்து விட்டான்.

745. நீ உலகைத் தேடிப் போனால் அது உன் தலையில் ஏறி அமர்ந்துவிடும். அதன் பக்கம் திரும்பாமல் இருந்தால் நீ அதைத் தாண்டிவிடலாம்.

746. எவன் இன்று என்றோ, நாளை என்றோ கவலைப்பட மாட்டானோ, ப்ரபுவின் உறவுக்கு அப்பால் இஹலோகத்தையும், பரலோகத்தையும் துச்சமாக எண்ணுகிறானோ, அவனே ''ஸாது''

747. ஈசனின் பெயரைச் சொல்லாமல் எந்தச் செயலைச் செய்தாலும், எந்தப் பேச்சைப் பேசினாலும், பேராபத்தைச் சந்திக்க நேரிடும்.

748. எவன் ப்ரபுவை அடைந்துவிட்டானோ, அவன் தன் உருவத்தை விட்டுவிட்டு ப்ரபுவின் உருவத்தில் அடங்கி விடுகிறான்.

749 . வாயை முடிக்கொள். தெய்வத்தைத் தவிர வேறு

பேச்சுப் பேசாதே. உள்ளத்தில் அவனைத் தவிர வேறு எதையும் சிந்திக்காதே. உன் பொறி புலன்களையும், செயல்களையும் அவனுக்கு திருப்தி ஏற்படும் வகையில் பயன்படுத்து.

750. உலகிலுள்ள எல்லாப் பொருட்கள், எல்லா மனிதர்களையும் விட ப்ரபுவுக்கு அதிக இனியனாக இருப்பதே. தனிமையில் ப்ரபுவுடன் சேர்ந்து இருப்பதன் குறியாகும்.

751. எவன் சிறியசிறிய பிராணிகளிடம் அன்பு கொள்ள மாட்டானோ, அவன் தெய்வத்திடம் என்ன அன்பு கொள்ளப் போகிறான்.

752. சான்றோர்களுக்கும், பக்தர்களுக்கும் சேவை செய்தல், அவர்கள் உபதேசத்தைக் கேட்டல், அவர்களுடன் கூடி இருத்தல், அவர்கள் நடத்தையைப் பின்பற்றுதல் இதுவே உண்மையான இன்பத்தை அடைய ஒரே வழியாகும்.

753. எல்லாவற்றிற்கும் மேலிருப்பவர் நாராயணனே. அவருடைய பாதங்களில் வேறு எண்ணமில்லாமல் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதே நன்மைக்கு ஒரே உபாயம்.

754. தாய் சலித்துக் கொண்டு குழந்தையை மடியிலிருந்து இறக்கிவிட்டாலும் கூட குழந்தை அம்மாவிடம் ஒட்டும். அவளையே எண்ணி அழும், கத்தும், விழுந்து புரளும். அதேபோல், என்னைக் காப்பவனே! நீ என்னை எவ்வளவு வேண்டுமானாலும் ஒதுக்கு. என் துயரைக் கவனிக்கமாலிரு அந்த நிலையிலும் உன் பாதங்களை விட்டு நான் எங்கேயும் போகமுடியாது. உன் திருவடிகளை விட்டால், எனக்கு வேறு ஏது கதி?

755. கணவன் தன் பதிவிரதையான மனைவியை எல்லோருக்கும் எதிரே அவமதித்தாலும் கூட அவள் அவனைவிட மாட்டாள். அதேபோல் நீ எவ்வளவு வேண்டுமானாலும் என்னைத் திட்டி ஒதுக்க. என்றாலும் உன்னுடைய திருவடிகளை விட்டு வேறு எங்கேயாவது செல்லலாம் என்று எண்ணக்கூட மாட்டேன். நீ என்னைப் பார்க்காமலே இருந்தாலும்கூட எனக்கு நீ தான் உதவி. உன்னுடைய கருணை தான் எனக்குப் பிடிப்பு.

756. அட! உன் பாதங்களை விட்டு நான் போவதுதான் எங்கே? வேறு ஆசிரயம் என்ன? என்னுடைய தொல்லைகளை நீ நிவாரணம் செய்யாது போனால் என்ன? என்னுடைய இதயம் உன்னுடைய தயவுக்காகவே உருகுகிறது.

757. மேகங்கள், குடியானவனை மறக்கலாம். ஆனால் குடியானவன் கண்களைக் கொட்டாமல் மேகத்தையே பார்த்து நிற்பான். இப்படியே, என் தலைவனே! என் விருப்பத்திற்குரியவன் நீ ஒருவனே. உன்னை வேண்டி நிற்பவனுக்கு மூவுலகச் சொத்தும் ஒரு பொருளல்ல.

758. எவனுடைய உள்ளம் அழகின் களஞ்சியமாக இருக்கும் பகவான் நாராயணனுடைய பாதகமலங்களைச் சுற்றும் வண்டாக ஆகிவிட்டதோ, அவன் சாதாரணப் பெண் ஒருத்தியின் உருவத்தில் மனம் கொள்வானா? உலகின் எந்தப் பொருளின் மேல் ஆசை கொண்டுவிட்டாலும் அவனுக்கு ப்ரபுவின் பாதங்களில் பிரியம் எங்கேயிருக்கும்? (இருக்காது)

759. ப்ரபுவே! என்னுடைய நாக்கு உன்னையே புகழட்டும். என்னுடைய கைகள் உன் பாதங்களையே வருடட்டும். என் தலை உன் பாதங்களிலேயே பணியட்டும். என்னுடைய கண்கள் எங்கேயும் உன்னையே தரிசிக்கட்டும். என்னுடைய காதுகள் உன் பெருமையையே கேட்கட்டும். என்னுடைய உள்ளத்தில் உன் சிந்தனையேயிருக்கட்டும். என் இதயத்தை நீயே தடவிக் கொடு. இந்தக் கிருபையை நீ புரிய வேண்டும்.

760. காட்டுமானைப் பிடிக்க பழக்கி வைக்கப்பட்ட மான் தேவைப்படுகிறது. அவ்விதமே, ஸம்ஸாரத்தில் உழலும் உயிர்களைக் கரையேற்ற நாராயணனுடைய பக்தர்கள் பயன்படுகிறார்கள்..

761. எந்த மனிதன் தன்னுடைய முழு உலகத்தையும், உயிரையும், ப்ரபுவுக்கு அர்ப்பணம் செய்கிறானில்லையோ, அவன் இந்த பயங்கரமான உலகக் காட்டைத் தாண்ட முடியாது.

762. மீண்டும் அவனைப் பற்றி எண்ணத்

தேவையில்லாதபடி, ஒரே வழியாக ஈசனை எண்ணு (ஒருமுறை எண்ணிவிட்டால் வேறு எந்த எண்ணமும் தோன்றக் கூடாது)

763. இந்த உடல், மனம், வாக்கு மூன்றும் என்னுடையவை அல்ல. அவற்றை ஈசனுக்குக் கொடுத்துவிட்டேன். எனக்கு இந்த உலகமுமில்லை. மேலுலகமுமில்லை. இரண்டிற்குமே மாற்றாக பரமேச்வரன் இருக்கிறார்.

764. உன்னுடைய எல்லா வேலைகளையும் மறந்துவிட்டு ஈசனையே எப்போதும் எண்ணுவாயாக.

765. அந்தக் கருணைக்கடலின் கருணையின் ஒரு திவலை உன்மேல் பட்டுவிட்டால் கூட பிறகு உலகில் யாரிடம் இருந்தும் எதையும் கேட்கத் தேவையில்லை.

766. நாம் செய்ய வேண்டியதெல்லாம் பகவானையே நம்பி இருக்கக் கற்றுக் கொள்வதையே எல்லாவற்றையும் அவனிடம் ஒப்புவித்து விட்டு அவனுடைய கைகளில் (ஆடும்) பொம்மையாகி நமக்கு ஆனந்தமே ஏற்பட வேண்டும். இவ்வளவு தான் நாம் செய்ய வேண்டியது.

767. தெய்வ நம்பிக்கை, தெய்வத்தின் பெயர் இரண்டும் பாவங்களை வேருடன் அழித்துவிடும். இது உறுதி.

768. மனிதனுடைய் எந்த சுயமுயற்சியாலும், பகவானை அடைதல் என்பது நடக்க இயலாத ஒன்று. இறைவனை அடைய ஓரே வழி அன்புதான். அந்த அன்பு சுத்தமாகவும், ஸாத்விகமாகவும், வேறு விருப்பமற்றதாகவும் இருக்க வேண்டும்.

769. தெய்வம் ஆனந்த மயம். அவர் தன்னுடைய லீலையின் ரகத்தைப் பரப்புவதற்காகவே இந்தப் படைப்பைச் செய்கிறார். படைப்பதில் அவருக்கென்று ஒன்றும் சுயநலம் கிடையாது. அனாதி காலமாகப் பிரிந்திருக்கும் ஜீவன்களுக்கு அநுக்கிரஹம் செய்யவே. அவர் படைப்பு விளையாட்டைத் தொடங்கி வைக்கிறார்.

770. பரமாத்மாவின் காட்சியில் ஈடுபட்டு அவரை எண்ணுவதைக்கூட மறந்துவிடு. இதுதான் ஸ்மரணையின் (எண்ணத்தின்) உச்சக் கட்டமாகும்.

771. இந்த உலகம் அவ்வளவையும் திரட்டி ஒரு சிறுவன் வாயில் போட்டாலும் அவன் பசி தீராது. எவன் மனம் உணவு, உண்டி, நகை, நட்டு, உடை இவற்றில் குடியிருக்கிறதோ, அவன் நிலை மிருகத்தைவிடத் தாழ்ந்ததாகும்.

772. உலகின் அவ்வளவு பொருட்களிலிருந்தும் உன் முகத்தைத் திருப்பி, ப்ரபுவின் பக்கமே பார். இந்த உலகை இன்று இல்லையென்றாலும், நாளை விட்டுத் தொலைத்துத் தானே ஆக வேண்டும்.

773. ஈசன் தன்னுடைய பக்தனிடம் "நீ உலகத்திலிந்து உன் முகத்தைத் திருப்பிக் கொள். என்னிடம் வா. இதைவிட்டு நீ எவ்வளவு செய்தாலென்ன? என்ன செய்தாலென்ன? என்னிடம் வராமல் உனக்கு உண்மையான அமைதியும், ஸுகமும் கிடைக்கப் போவதில்லை. அதனால் தான் கேட்கிறேன். எது வரையில் நீ என்னை விட்டு ஓடிக் கொண்டிருப்பாய்? என்னை மறைந்திருப்பாய்? என்று மீண்டும் மீண்டும் கேட்கிறார்.

774. உடுப்பதிலும், போர்த்துக் கொள்வதிலும் எளிமையாக இரு. ஆடம்பரமான ஆடை, அலங்காரங்களை ஒதுக்கு.

775. பக்தன் முழுமையாக எப்பொழுது பகவானை ஆசிரயிருக்கிறானோ, அதே கணமே பரமேச்வரர் அவனுடைய யோக, க்ஷேமத்தினுடைய எல்லா பாரத்தையும் தன் கைகளில் எடுத்துக் கொள்கிறார்.

776. ஈசன் மேல் இடையறாத பார்வை வைத்திருப்பதே இறைவனை அறிவதன் பயனாகும்.

777. மனம் முழுமையாக விழித்திருக்கிறது என்றால் என்ன பொருள்? ஈசனைத் தவிர வேறு எந்தப் பொருளையும் அது தேடாது. ஹரியினுடைய அன்பு ரசத்தில் முழுகிய பிறகு மனதுக்கு வேறு எந்தப் பொருளில் சுவை ஏற்பட முடியும்?

778. அழுக்கால், அழுக்கைக் கழுவ முடியாது. அதேபோல் போகங்களால் கிடைக்கும் ஆனந்தம், அவை கிடைக்காததனால் ஏற்படும் துன்பத்தை அழிக்க முடியாது. சேற்றினால் சேறு கழுவப்படுவதில்லை. ஆனால் அது அதிகமாகும்.

779. ஏ பிரபுவே! உன்னைவிட்டால் எனக்கு வேறு யாருமில்லை. நீ என்னுடையவனாகிவிட்டால் பிறகு எல்லாமே உன்னுடையதுதான். என்னைக் கொஞ்சம்கூட விலக்காதே. எனக்கு எதிரே உன்னைத் தவிர வேறு யாரையும் வரவிடாதே.

780. மனிதனின் உண்மையான கடமை என்ன? ஈசனைத் தவிர வேறு எந்தப் பொருளுடனும் உறவு ஏற்படுத்திக் கொள்ளக்கூடாது.

781. யம நியமங்கள் என்ற வலைகள் முழுவதையும் பிய்த்து எறிந்து விட்டு மனம், புத்தி, சித்தம், பிராணன்கள் எல்லாவற்றையும் ஒரே எண்ணத்துடன் ப்ரபுவிடம் அர்ப்பணித்து விடு.

782. உலகின் விருப்பு, வெறுப்பு எல்லாவற்றையும் அழித்து விட்டு மனிதன் ப்ரபுவிடத்தில் அன்பு கொண்டு இதயத்தின் உண்மையான பிரார்த்தனையின் ஸாதனை புரிய வேண்டும்.

783. இந்த உலக அல்லது பரலோகப் பொருள் எதனையும் இறைவனிடம் யாசிக்காதே. அவனுக்கு உன்னுடைய தேவையைப் பற்றி உன்னை விட அதிகமாகத் தெரியும். உனக்குத் தேவை ஏற்படும்போது தயவுள்ள அந்தப் ப்ரபு தானே கொடுத்து விடுவான். நீ செய்ய வேண்டியது நாலாபக்கங்களிலும் சிதறுகிற மனதை ஒன்று சேர்த்து ப்ரபுவின் பாதங்களில் குடியமர்த்தி விடுவது ஒன்றுதான்.

784. ஞானி, தவம் செய்பவன், சூரன், கவி, பண்டிதன், நல்ல குணம் படைத்தவன் - இவர்களில் யாரைத் தான் மோஹம் மயக்காமல் விட்டது? காமம் ஆட்டாமல் விட்டது? இந்த உலகம் மை நிறைந்த இருட்டறை. இதன் கறையிலிருந்து தப்ப தெய்வத்தின் பெயரை இடையறாது எண்ணுவதே வழியாகும்.

785. எந்த பாவத்தைத் தொடங்கும்போது ஈசனிடத்தில் பயமும், கடைசியில் ஈசனிடத்தில் வேண்டுதலும் ஏற்படுகிறதோ, அந்தப் பாவம் ஸாதகனை ஈசனுக்கு அருகே இட்டுச் செல்கிறது. ஆனால் எந்தத் தவத்தின் தொடக்கத்தில் அகம்பாவமும், முடிவில் தற்பெருமையும் ஏற்படுகிறதோ அந்தத் தவம் அவனை ஈசனிடத்தில் இருந்து ஒதுக்கி அழைத்துச் சென்று விடுகிறது.

786. அஹங்காரம் கொண்ட ஸாதகனை, ஸாதகன் என்று சொல்லக்கூடாது. அவன் பெரிய அபராதி ஆவான். ஆனால் ப்ரபுவிடம் பிராத்தனை செய்யும் ஒரு பாவியும்கூட ஸாதகனே.

787. கழிவிரக்கம் கொள்ளாமல் உண்மையான ஸாதனை தொடங்காது. ஈசனின் ஸாதனைக்கு முதல்படி பச்சாதாபமாகும். ஈசனை எண்ணும்போது கழிவிரக்கம் பற்றிய எண்ணங்களையும் ஒதுக்கிவிட வேண்டும். அப்பொழுது தான் நாம் விரும்பும் பொருட்களின் இடத்தை ஈசன் எடுத்துக்கொள்ள முடியும். (ஈசனே எல்லாமாக முடியும்)

788. எந்த நேரத்தில் மக்கள் என்னை உன்மத்தன் என்றும், பித்தன் என்றும் இகழ்வார்களோ, அப்பொழுது என் உள்ளத்தில் ரஹஸ்யமான தத்துவ ஞானம் உதிக்கும்.

789. பொறுமையுள்ள ரிஷி, செய்நன்றியுள்ள பணக்காரன் இவர்களில் சிறந்தவர் யார்? பொறுமையுள்ள ரிஷியே. பணக்காரன் எவ்வளவு நல்லவனாயிருந்தாலும் மனது லக்ஷ்மியையே (திருமகளை) சுற்றிக் கொண்டு நிற்கும். ஆனால் ரிஷியின் இதயமோ தன்னுடைய ப்ரபுவிடத்தில் லயித்து நிற்கும்.

790. எந்த மனிதன் வாழ்க்கை நடத்த நெறியுடன் கூடிய செயலைச் செய்கிறானோ, அவன் ஈசனின் மகிமையை அறிகிறான். ஆனால் எந்த மனிதன் ஈசனுக்காகவே வாழ்க்கை நடத்துகிறானோ, அவன் ஈசனையே அடைகிறான்.

791. நீ ப்ரபு அறிகிறாயல்லவா? பிறகு உனக்கு வேறு ஒன்றும் தெரியாது என்றால் அதனால் உனக்கு ஒரு கெடுதலும் இல்லை. ஈசன் உன்னை அறிகிறானல்லவா? பிறகு வேறு

ஒருவருக்கும் உன்னைப் பற்றித் தெரியவில்லையென்றாலும் அதனால் ஒரு இழப்பும் கிடையாது.

792. எவன் ஈசனை விட்டு மற்றவனிடம் நட்புக் கொள்கிறானோ, அவன் எப்பொழுதாவது ஸுகமாக இருக்க முடியுமா?

793. என்னுடையது என்கின்ற பற்று இருக்கும் வரையில் துக்கம்தான், தனித்த பற்றுத்தொலைந்து விட்டால் எல்லோரும் நம்மவரே, பற்றை விட்டு நடந்துகொள். சொத்து, மனைவி, குடும்பம் இவற்றையெல்லாம் என்னுடையவை என்று எண்ணும் எண்ணங்களை விட்டுவிட்டு நடந்து கொள்வாயாக.

794. வேற்று மனிதனுடன் உறவு வைத்திருக்கும் பெண், வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருந்தாலும்கூட உள்ளுக்குள்ளே அந்தப் புதிய உறவின் இன்பத்தைச் சுவைத்துக் கொண்டிருப்பாள். இதேபோல் வெளியில் நீ அரசு அலுவல்களைச் செய்து கொண்டிரு. ஆனால் இதயத்தில் எப்பொழுதும் அந்த இறைவனைப் பற்றிய எண்ணத்துடன் விளையாட்டாக நடந்து கொள்.

795. எவன் பெண்களின் அங்க அசைவுகளினாலும்,கடைக்கண் பார்வையாலும் அடிபடாமல் இருக்கிறானோ, எவனுடைய உள்ளத்தைக் கோபமாகிற நெருப்பு சுட முடியாதோ, எவனை அதிகமான விஷய வாசனைகளாகிற அம்புகள் துளைக்க முடியுதோ, சுருக்கமாக எவனுடைய பார்வையில் உலக போகங்கள் அனைத்தும் புல்லைப்போல் ஆகிவிடுகின்றனவோ, அந்த தைரியசாலி இந்த மூவுலகத்தையும், பேசிக் கொண்டிருக்கும் பொழுதே, வெற்றி கொண்டு விடுவான்.

796. வீட்டை முழுவதுமாக விட்டுவிட வேண்டும் என்பதுதான் மிக உத்தமமான ஸித்தாந்தம். ஆனால் அதற்குத் திறமையில்லையென்றால் வீட்டிலிருந்து கொண்டே எல்லாச் செயல்களையும் க்ருஷ்ணனுக்காக, க்ருஷ்ணன் பிரீதிக்காக

என்று செய். ஏனென்றால் ஸ்ரீக்ருஷ்ணன் எல்லாவிதமான அனர்த்தங்களிலிருந்தும் விடுவிப்பவர்.

797. எந்த சேர்க்கையுமே சரியில்லை. எந்தவிதமான சேர்க்கையையும் ஒரே அடியாய் விட்டுவிட வேண்டியது தான். அப்படி எல்லாவற்றையும் விட்டுவிடுவதற்குத் தைரியம் இல்லையென்றால் ஸாதுக்கள், மஹாத்மாக்களிடமே கூட வேண்டும். ஏனென்றால் சேர்க்கையால் ஏற்படும் காமம் இருக்கிறதே, அதற்கு மருந்தே மஹாத்மாதான்.

798. பகவானுடைய சேவைக்கு எது அனுகூலமாக இருக்குமோ, அதைப் பற்றியே சிந்திக்க வேண்டும். ஈச்வர தத்துவத்துக்கு விலக்கானவற்றை முழுமையாக விட்டுவிட வேண்டும்.

799. பதிவிரதைப் பெண்ணுக்கு, ''ஒருமுறை அக்னி சாட்சியாக என்னைக் கைபிடித்த கணவன் என்னைக் கண்டிப்பாய்க் காப்பாற்றுவாள்'' என்ற நம்பிக்கையுண்டு. அதேபோல் ஸ்ரீக்ருஷ்ணனும் என்னைக் கண்டிப்பாய்க் காப்பாற்றுவான் என்று அவன் மேல் அசையாத நம்பிக்கை வை.

800. பகவானிடத்தில் ஆத்மநிவேதனம் செய்த பிறகு அவரிடத்தில் எப்பொழுதும் கெஞ்சுபவனாகவேயிரு.

801. நிழலை விட்டுவிட்டு உண்மையான ஆனந்தத்தைத் தேடு. உனக்கு அமைதி கிடைக்கும்.

802. இதயத்தில் எதுவும் வேண்டும் என்கின்ற விருப்பம் இல்லாதபோது பணக்காரன் போலத்தான் ஏழையும்.

803. புகழ் பத்தினிப்பெண், நடத்தை கெட்டவள் அல்ல. அவள் ஒரே ஆணான ஸ்ரீஹரியை வரித்து விட்டாள். எனவே நீ அவளை விரும்புவதை விட்டுவிடு! முற்றிலுமாக விட்டு விடு.

804. பக்தி மார்க்கத்தில் முன்னேறுகின்ற ஸாதகன் பெண், பொன், புகழ், பதவி, பெருமை, காசு, புதல்வன், பரிவாரம்

என்று அன்புக்குரிய எவ்வளவு பொருட்கள் இருக்கின்றனவோ அவ்வளவையும் விட்டுவிட்டே இந்தப் பாதைக்கு வர வேண்டும்.

805. எவன் இதயத்தில் உண்மையான ஸ்ரீக்ருஷ்ண பக்தியிருக்கிறதோ, அவனைவிடச் சிறந்தவன் யாரும் இருக்க முடியாது. சிறப்புக்கு இது முடிவான எல்லையாகும்.

806. சிரவணமும், கீர்த்தனமும் ஈசனின் அன்பைப் பெறுவதற்கு முக்கிய உபாயங்களாகும். மற்ற எல்லா உபாயங்களையும், பற்றுக் கோடுகளையும் அடியோடு விட்டு விட்டு ஸ்ரீஹரியின் பாதங்களைப் பற்றிக் கொள்ள வேண்டும்.

807. மனத்தின் போக்கு கங்கைத் தாரைபோல் ஸ்ரீ ஹரியின் பக்கமாகப் பாய்ந்து கொண்டிருக்கட்டும். பிறகு ஸ்ரீ க்ருஷ்ணன் நம்மைவிட்டுத் தொலைவில் இருக்கமாட்டார். அவரே ஓடி வந்து பக்தனைக் கட்டிக் கொள்வார். இது தான் அவருடைய பக்தவத்சலத் தன்மை.

808. ஸாதுக்கள், மஹாத்மாக்கள், அடியார்கள், பக்தர்கள் இவர்களின் திருவடிகளில் குறைவற்ற அன்பை வை. அவர்கள் எப்படியிருந்தாலும் அவர்களை ஒருபொழுதும் நிந்தனை செய்யாதே. எல்லோரையும் தெய்வபுத்தியுடன் பணிவாக வணங்கு. உனக்கு நன்மை கிடைக்கும்.

809. ''ஸ்ரீ க்ருஷ்ணா'' ''ஸ்ரீ க்ருஷ்ணா'' என்று சொல்லிக் கொண்டேயிரு. பிருந்தாவனத்தில் (ஸ்ரீ க்ருஷ்ணன் இருக்கும் இடத்தில்) வாசம் செய். இதில் தான் மிகப்பெரிய நன்மையிருக்கிறது.

810. வைராக்யம் ஏற்பட்டுவிட்டால் மானம், மரியாதை, இந்திரிய ஸுகத்தில் எண்ணம், வெட்கம் இவைகளைப் பற்றிய எண்ணம் இருக்காது.

811. தியாகி என்று சொல்லிக் கொண்டே எவன் ஸுகத்தைத் தேடுகிறானோ, அவன் நாய்க்குச் சமம்.

812. தியாகிக்குத் தன்னுடைய போக்கை எப்பொழுதும்

சுதந்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும். பிச்சை பெற்று உண்ணுவது அவனுக்குப் பெரிய அணியாகும்.

813. தியாகி என்று சொல்லுபவன் தன் நாக்கை வசப்படுத்திக் கொள்ள முடியாது போனலோ அல்லது வீட்டை விட்டு வெளியேறிய பிறகும் பிச்சை கேட்கக் கூச்சம் கொண்டாலோ, அவனை தியாகி என்று சொல்லமுடியுமா?

814. வைராகி இடைவிடாமல் நாம ஜபம் செய்து கொண்டிருக்க வேண்டும்.



815. நேரத்தில் காய்ந்ததோ, வறண்டதோ எது பிச்சையில் கிடைத்தாலும், அதை உண்டு க்ருஷ்ண கீர்த்தணத்துக்காக மட்டிலுமே இந்த உடலைத் தாங்கியிருக்க வேண்டும்.

816. ஸாஸ்திரங்களின் சாரம் இதுதான். க்ருஷ்ண கீர்த்தனமும் பெயரை எண்ணுதலுமே உலகில் சுகத்தின் மிகப் பெரிய சாதனம், அன்பு பெயரைச் சொல்வதால் மட்டுமே கிடைக்கும்.

817. பக்தியைப் பெற விரும்புபவன் முதன்முதலில் சாது சங்கம் செய்ய வேண்டும்.

818. பஜனை, கீர்த்தனம், ஸத்ஸங்கம், கண்ணன் லீலைகளை நினைவில் கொள்ளுதல் - இது தான் முக்கியமான தர்மம்.

819. குற்றம், குறைகளைப் பார்க்காதிருப்பதே ஒரு வைஷ்ணவனுக்கு எல்லாவற்றையும் விட முக்கியமான வேலையாகும்.

820. ஊர்க்கதையை ஒருபொழுதும் கேட்கக் கூடாது. ஊர்க்கதை மட்டும் நினைவில் இருக்குமே தவிர பஜனையில் சித்தம் ஈடுபடாது.

821. சிற்றின்பத்தில் இச்சை கொண்டவர்களுடன் பேசுவதால் நம்முடைய சித்தமும் நஞ்சாகி விடுகிறது.

822. மிகவும் சுவையுள்ள அன்னம், படாடோபமான துணிகள் இவைகளில் இருந்து நம்மைக் காத்துக் கொள்ள வேண்டும்.

823. உள்ளத்தில் அபிமானம் ஏற்பட்டவுடனேயே எல்லா ஸாதனையும் பயனற்றுப் போய்விடும்.

824. எப்பொழுதும், எங்கேயும் எல்லா நிலைகளிலும் எம்பெருமானின் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். நாம ஜபத்தால் ஸ்ரீக்ருஷ்ணனின் பாதங்களில் அன்பு விளைகிறது.

825. மானஸிகமான பூஜையே தலைசிறந்த வழிபாடாகும்.

826. முடிந்த வரையில் விஷயங்களில் (சிற்றின்பங்களில்) ஆசையுள்ள பணக்காரர்களின் உணவை உண்ணுவதைத் தவிர்க்க வேண்டும்.

827. அத்யாத்ம நூல்களைக் கேட்டல், பகவானின் பெயரைப் பாடுதல், மனதின் எளிய நிலை, நல்லவர்களின் கூட்டு, உடலமைப்பில் பெருமை கொள்வதை விடும் பயிற்சி இவையெல்லாம் பாகவத தர்மங்கள். இவற்றை நடத்துவதால்

மனிதனின் அந்தக்கரணம் சுத்தமடைகிறது. பிறகு அவன் அநாயாசமாக (சிரமமேயில்லாமல்) பகவானிடத்தில் அன்புள்ளவனாக ஆகிவிடுகிறான்.

828. கவலைப்படுவதால் ஒரு பயனுமில்லை. துக்கத்தை அனுபவிப்பது தான் மிச்சம். எவன் ஸுகம், துக்கம் இரண்டையுமே விட்டுவிடுகிறானோ, எவன் ஞானத்தில் நிறைவு பெறுகிறானோ, புத்திமானாயிருக்கிறானோ அவன் தான் ஸுகமடைகிறான்.

829. நன்னடத்தையைக் காப்பாற்றுவதால் மனிதன் நீண்ட ஆயுளையும், விரும்பிய குழந்தைகளையும், குறையாத சொத்தையும் அடைவான். அவனுக்குச் சிறுவயதிலேயே மரணம் முதலிய கெடுதல்கள் ஏற்படாது.

830. எல்லாவிதத்தாலும் நம் நன்மைக்கான செயல்களையே செய்யவேண்டும். யார் அதிகம் பேசுகின்றார்களோ, அவர்களால் ஒன்றும் ஆவதில்லை. எல்லோரையும் ஏக காலத்தில் மகிழ்விக்கக் கூடிய ஒரு உபாயம் இந்த உலகத்தில் எங்குமில்லை.

831. அடேய்! புலன்கள் தேடும் விஷயங்களில் ஏன் இவ்வளவு அழுந்திக் கிடக்கிறாய்? ஏன் அவற்றை விட்டு மனதைத் திருப்ப மறுக்கிறாய்? ஸ்ரீ ஹரியைப் பஜனை செய். யமன் வலையில் விழவேண்டாம்.

832. எவனது இல்வாழ்க்கையில் ஸத்தியம், தர்மம், தைரியம், த்யாகம் என்ற நான்கு அறநெறிகள் இருக்கின்றனவோ, அவனுக்குப் பரலோகத்திற்கான கவலை தேவையில்லை.

833. எவன் உள்ளத்திலிருந்து விருப்பும், வெறுப்பும் அழிந்து விட்டனவோ, அவனே ஞானி, குணவான், வள்ளல், தியானத்தில் ஒன்றியவன் ஆவான்.

834. உள்ளத்தின் அஹங்காரத்தை விட்டுவிட்டு மற்றவருக்கும் அமைதி ஏற்படும் வகையில் பேச்சுக்களைப் பேசு. உனக்கும் அமைதி கிட்டும்.

835. இரவில் தூக்கத்தையும், பகலில் உணவையும்

மறந்து எல்லா வீண்பேச்சையும் விட்டுவிட்டு இரவும், பகலும் ஸ்ரீ ஹரியை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

836. எதிரி இல்லையென்றால், நண்பனின் மதிப்புத் தெரியாது. அதைப்போல அன்புடன் நடந்து கொள்ள இடமில்லையென்றால், அன்பின் ஆற்றலையும் அறிந்து கொள்ள முடியாது.

837. மக்கள் விதவிதமான சிந்தனையைச் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் தங்களுடைய உள், வெளி வாழ்க்கையைக் கவனித்துச் சோதித்துக் கொள்ள வேண்டும். தன்னுடைய சுபாவம், செயல்கள் இவற்றின் விஷயத்தில் எப்பொழுதும் கவனமாயிருக்க வேண்டும். நல்வழியை ஒருபொழுதும் விடக்கூடாது. இதுவே மிக உத்தமமான செயல்.

838. பிரேமையின் அறிமுகம் தோத்திரங்களால் மட்டும் கிடைப்பதில்லை. சுயநலத்துக்கு எள்ளும், தண்ணீரும் இறைத்துவிட்டு (அறவே விட்டுவிட்டு) பலவித இன்னல்களை அனுபவித்துப் பிரேமையை நிரூபிக்க வேண்டியிருக்கும்.

839. எவன் தெளிந்த மனதுடன் ஈசனை எண்ணிக் கொண்டிருக்கிறானோ, அவனுக்கு வேறு நண்பன் தேவைப்படுவதில்லை.

840. எவர்களுடைய சேர்க்கையினால் ஸத்தியம், தூய்மை, தயவு, மௌனம், புத்தி, வெட்கம், புகழ், பொறுமை, மன அடக்கம், புலனடக்கம், சௌபாக்கியம் எல்லாம் அழிந்து போகுமோ, அப்படிப்பட்ட அமைதியைக் குலைக்கும் மூர்க்கர்கள். பெண்கள் பிடியில் இருப்பவர்கள். தேக அபிமானம் கொண்ட மனிதர்கள் இவர்களுடன் ஒரு பொழுதும் சேர்க்கை வைத்துக் கொள்ளக் கூடாது.

841. கெட்ட சேர்க்கையை முற்றிலுமாக விட்டுவிட வேண்டும். ஏனென்றால் அதனால் காமம், குரோதம், மோஹம் நினைவுக்குலைவு, அறிவின் அழிவு ஏற்படும். இறுதியாக எல்லாவிதத்தாலும் அழிவே ஏற்படும்.

842. அசடர்கள் எப்பொழுதுமே மகிழ்ச்சியற்றவர்களாக

இருக்கிறார்கள். மகிழ்ச்சியின்மைக்கு ஒரு எல்லை கிடையாது. ஆனால் மனநிறைவில் தான் மிக அதிக ஸுகம் கிடைக்கிறது.

843. கெட்ட நடத்தையுள்ள மனிதர்களுக்கு உலகில் நிந்தனை கிடைக்கிறது. அவர்கள் எப்பொழுதும் துயரை அனுபவிக்கிறார்கள். நோயாளியாயிருக்கிறார்கள். அவர்கள் ஆயுளும் மிகவும் குறைந்து விடுகிறது.

844. சந்தோஷம் ஏற்படாமல் காமம் அழியாது. காமம் இருக்கும் வரையில் கனவில் கூட ஸுகம் கிடைக்காது. காமம் ஸ்ரீ ராமனைப் பாடித் துதிக்காமல் அழியாது.

845. உன் வழியில் எவர்கள் முள்ளைத் தூவுகின்றார்களோ, அவர்கள் வழியில் நீ மலர்களைத் தூவு.

846. திரவியத்தின் பேராசையால் நிலத்தைத் தோண்டினோம். மலைகளிலிருந்து உலோகத்தை எடுத்து ஊதினோம். கடலில் பயணம் செய்தோம். முயற்சிகள் செய்து அரசர்களை அகம் மகிழ்வித்தோம். மந்திர ஸித்தி பெறுவதற்காக மயானத்தில் இரவைக் கழித்தோம். ஆனால் எங்கேயும், ஒரு செல்லாக் காசு கூடக் கிடைக்கவில்லை. ஏ த்ருஷ்ணையே! (பேராசையே) நீ உனது பிடியை விட்டுவிடு.

847. பிரேமையே ப்ரபுவின் சொத்து அது கிடைத்தவனுக்கு எல்லாமே கிடைத்துவிடும்.

848. உபாஸனை செய்வதால் மட்டுமே ஆத்ம முன்னேற்றமும் பூரணத்துவமும் கிடைக்காது. அதற்கு பிரேமை (அருள் அன்பு) வேண்டும். பிரேமையினால்தான் ஆத்மாவின் முழு மலர்ச்சி ஏற்படுகிறது.

849. உலகப் பொருட்களை அடைவதற்கு நீ எவ்வளவு முயற்சி செய்கிறாயோ, அவ்வளவு முயற்சி பரமபதத்தை அடைய முயன்றால் அங்கே கண்டிப்பாக உனக்கு இடம் கிடைக்கும்.

850. யாரும் நமக்கு நல்லதோ, கெடுதலோ செய்ய முடியாது. இதை நினைவில் கொள்ள வேண்டும். ஆவதெல்லாம் அவன் செயல்.

851. கோவிந்தனின் புகழ்பாடாமலேயே வாழ்க்கை வீணாகிக் கொண்டிருக்கிறது. ஏ மனமே! மீன் தண்ணீரை எப்படி வேண்டுகிறதோ, அப்படியே நீயும் ஸ்ரீ ஹரியை வேண்டித் துதி.

852. உறுதிப்பாடுடையவன், மென்மையான சுபாவமுள்ளவன், புலன்களை வென்றவன், கொடும் செயல்களைச் செய்கின்றவனுடன் சேராதிருப்பவன், பிறருக்கு ஊறு செய்யாதவன், அப்படிப்பட்ட மனிதன் புலனடக்கத்தாலும், தானத்தாலும் ஸ்வர்கத்தை வெற்றி கொண்டுவிடுகிறான்.

853. பிரம்மசாரியம், தவம், உடல் மனச்சுத்தம், மனநிறைவு, உயிர்களுடன் நட்பு, பகவான் உபாஸனை இவையெல்லாம் எல்லோராலும் காக்கப்பட வேண்டிய தர்மங்கள்.

854. காமம், குரோதம், லோபம், மோஹம் இவற்றை யெல்லாம் விட்டுவிட்டு நான் யார் என்று சிந்தித்து அறிந்து கொள். ஆத்ம ஞானமற்ற அசடர்களுக்கு நரகத்தில் விழ வேண்டியிருக்கும்.

855. நாம் நல்ல நிலையில் இருந்தால் எல்லோரும் நமக்கு பந்துக்கள், கெட்ட நிலையில் பந்துக்கள் துர்லபம். கெட்ட நிலையில் நண்பனாயிருப்பவனே உண்மையான பந்து. ஆபத்து ஏற்படும்பொழுது எவன் துணைக்கு வருவானோ, அவனே உண்மையான நண்பன். சென்ற விஷயங்களை எண்ணிக் குறைப்படுவதில் மண்டையை உடைத்துக் கொள்ளாதே.

856. நெறிமுறை அறிந்தவர்கள், பிராப்தத்தைப் பற்றி அறிந்தவர்கள், வேதம் அறிந்தவர்கள், சாஸ்திரம் அறிந்தவர்கள் அநேகர் இருக்கின்றனர். பிரம்மத்தை அறிந்தவர்கள் கூடக் கிடைத்துவிடலாம். ஆனால் தன்னுடைய அறியாமை எனும் குறையை அறிகின்றவர்கள் அரிது.

857. உலகியலில் விடுதலையடைந்த, மனிதனுக்கும் கஷ்டம் அவசியம் ஏற்படும். ஆனால் அவன் அதை விரும்பவும் மாட்டான். வெறுக்கவும் மாட்டான். ஏனென்றால் அவன் அதை

''இது உலகியல் போக்கு'' என்று நினைத்துச் சகித்துக் கொள்வான். இன்ப, துன்பங்களின் காரணமாக அவன் மனதில் சஞ்சலம் ஏற்படுவதில்லை. இதுதான் பத்தனுக்கும் (உலகில் கட்டுண்டு இருப்பவனுக்கும்) முக்தனுக்கும் உள்ள பேதம்.

858. பகவானைப் பூசிப்பதற்கு ஏழு மலர்கள் உபயோகமானவை. 1. அஹிம்சை, 2. புலன் அடக்கம், 3. உயிர்களிடத்தில் தயவு, 4. பொறை 5. தன் வசப்பட்ட மனது, 6. தியானம், 7. உண்மை. இம்மலர்களால் பகவான் மகிழ்வு எய்துகிறார்.

859. எதுவரை சூரியன் உதிக்கவில்லையோ, அதுவரை விண்மீன்கள் மினுமினுக்கும். அதேபோல் எதுவரையில் ஞானம் உதிக்காதோ, அதுவரையில் மனிதன் உலக ஸுகங்களில் உழல்கிறான்.

860. பகவானை அடைந்த மனிதன் பகவானுடைய பஜனையை விட்டுவிட்டு மற்றவருக்கு வழிகாட்டுபவனாக ஆகமுடியாது. ஏனென்றால் ப்ரபுவை விட்டால் வேறுயாரையும் காப்பாற்றுபவனாகவோ, சொல்லித் தருபவனாகவோ, வழிகாட்டுபவனாகவோ அவன் காண்பதில்லை.

861. நம்பிக்கையில்லாமல் பக்தி ஏற்படாது. பக்தியில்லாமல் பகவான் மகிழ்ச்சி அடைய மாட்டார். பகவானின் அருள் இல்லாமல் ஜீவனுக்குக் கனவிலும் கூட அமைதி கிட்டாது.

862. எவ்விதம் பறவைகள் இரவில் வந்து மரத்தின் மேல் தங்கி, உதயமானவுடன் பறந்துவிடுகின்றனவோ, அவ்விதமே குடும்பத்தையும் எண்ண வேண்டும்.

863. சொத்து, மனைவி, குழந்தைகளிடத்தில் சித்தத்தை ஈடுபடுத்தி வைத்திருக்கிறாய். ஆபத்தில் உதவக்கூடிய நண்பனான தெய்வத்தை ஏன் தேடாமல் இருக்கிறாய்?

864. எவன் மனதில் திருப்தியில்லையோ, அவனே தரித்திரன். எவன் புலன்களின் பிடியில் இருக்கிறானோ, அவனே கருமி. எவனுடைய அறிவு பொருட்களில் சிக்கியிருக்காதோ, அவனே சுதந்திர மனிதன்.

865. துக்கத்திலிருந்தாலும் கூட எதிராளியிடம் கசப்பான சொற்களைச் சொல்லக்கூடாது. மற்றவருக்குத் துரோகம் விளைவிக்கும் எந்த வேலையிலும் அறிவைச் செலுத்தக் கூடாது. எந்த வார்த்தையைக் கேட்டால், மக்கள் மனதில் பதற்றம் ஏற்படுமோ, அந்த வார்த்தைகளைச் சொல்லக்கூடாது.



866. எவன் வீட்டிலிருந்து அதிதி (விருந்தாளி) ஏமாந்து திரும்புகிறானோ, அவன் நூறு குடங்கள் நெய்யை வேள்வியில் ஹோமம் செய்தாலும் கூட வீணே. அதிதியிடம் சாதி என்ன, படிப்பு எவ்வளவு என்றெல்லலாம் கேட்காதே. அவனைத் தெய்வமாக எண்ணி அவனுக்கு விருந்தளிக்க வேண்டும். ஏனென்றால் அதிதியிடம் எல்லா தேவதைகளுமே குடியிருக்கிறார்கள்.

867. உன்னிடத்தும், எங்களிடத்தும், எல்லாஉயிர்களுக்குள்ளும், எங்குமே விஷ்ணு ஒருவரே வியாபித்திருக்கிறார். பிறகு ஏன் பொறுமை இழந்து கோபித்துக்

கொள்கிறாய்? எல்லோருள்ளும் ஒரே ஆத்மா இருப்பதை அறி. பேத அறிவை ஒழித்துவிடு.

868. யாருக்கும் ஊறு செய்யாதே. தொல்லை கொடுக்காதே. பொய் சொல்லாதே. திருடாதே. உடல், மனம்,வாக்கல் நியாயத்தையே செய். யாரிடமும் எதையும் எதிர்பார்க்காதே.

869. ஒரு நாள் மேருபர்வதம் விழுந்துவிடும். கடல் வற்றிவிடும். தரை அழிந்துவிடும். பிறகு கணத்தில் நாசமடையக் கூடிய இந்த உடலைப் பற்றி என்ன சொல்ல?

870. மற்றவருக்கெதிரே தன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொள்வதில் எவனுக்குக் கொஞ்சம்கூடக் கூச்சம் இருக்காதோ, அது மட்டுமல்ல எவனுக்கு இதில் தன்னுடைய நன்மை இருக்கிறது என்று தோன்றுகிறது. தன்னுடைய நற்செயல்களைப் பிறர் அறிந்து கொள்ளவேண்டும் என்று எவன் விரும்ப மாட்டானோ, எவன் தன்னுடைய ஸங்கல்பத்தில் உறுதியாக இருப்பானோ, அவனே உண்மையாளன். அவனே உண்மையான ஸாதகன்.

871. தாய், தந்தையை மரியாதையுடன் போற்று. கெட்ட நடத்தையில் ஈடுபடாதே. திருடாதே. பொய்ச்சாட்சி சொல்லாதே. மற்றவர் பொருளின் மேல் மனதைச் செலுத்தாதே.

872. முதலில் தன்னுள்ளே உள்ள கெட்ட எண்ணங்கள், அஹங்காரம், பயம், அறியாமை இவற்றை ஒழிக்க வேண்டும். அப்பொழுதுதான் ஒருவன் தெய்வமயமாக ஆகமுடியும்.

873. ஆத்மா என்றும் தூய்மையானது அதை நிரூபிப்பதற்குக் காலம், நேரம், சுத்தி என்ற எதுவும் தேவையில்லை.

874. தெய்வத்தின் பெயரில் இனிமை, உயிர்களிடத்தில் தயவு, பக்தர்களுக்குப் பணிவிடை இம்மூன்று ஸாதங்களைப் போல் வேறு ஒரு ஸாதனமும் கிடையாது.

875. எவன் இல்வாழ்க்கையில் உண்மை, கடமை, தைரியம், தியாகம் என்ற நான்கு தர்மங்கள் இருக்குமோ, அவனே இறந்த பிறகு இந்த உலகத்திலிருந்து பரலோகத்திற்குச் சென்று ஒரு கவலையும் படாமல் இருக்க முடியும்.

876. எவன் பிறர் மேல் பழியைச் சுமத்தித் தான் நல்ல பெயரைப் பெற விரும்புகிறானோ, அவனுடைய முகத்தில் இறந்தும் துடைக்க முடியாது களங்கம் ஓட்டிக் கொள்ளும்.

877. எந்த வீட்டில் ஸாதுக்கள் இகழப்படுகிறார்களோ, அந்த வீடு வேரோடு அழிந்துவிடும். அதன் அடிப்படை, பெயர், இடம் ஒன்றுமே தங்காது.

878. ஹரி நாமம் என்ற மாத்திரையை பிரேமை, பக்தி, அதில் பிடிவாதம், ஒரு முனைப்பு, நிஷ்டை ஆகிய அனுபானத்துடன் சேர்த்துச் சாப்பிடுவதால் புலன்கள் என்கின்ற நோய் சீக்கிரமே தீர்ந்துவிடும். (அனுபானம் - மருந்தோடு சேர்ந்து அருந்த வேண்டிய திரவப் பொருள்)

879. மாயை - மோஹத்தை விட்டுவிட்டு, ஸ்ரீ ராமனை வழிபட வேண்டும். அது பாரசக்கல் அதன் ஸ்பர்சம் ஏற்படாமல் மனித உடலாகிற இரும்பு நாளுக்கு நாள் துருப்பிடித்து வரும்.

880. எதுவரையில் மனிதன் ஒரு ஊரை விடமாட்டானோ, அதுவரை வேறு ஒரு ஊருக்குப் போக முடியாது. அதைப்போல் உலகின் உறவை விடாத வரையில் தெய்வத்தின் இருப்பிடம் போவது இயலாத வேலை.

881. மனிதன் தன்னால் ஆகக்கூடிய வேலையைச் செய்யாமல், பிறர் வசத்திலிருக்கின்ற வேலையைச் செய்யப் பார்க்கிறான். புரியும்படிச் சொன்னால் அவன் தன் குற்றம், குறைகளை விடாமல் மற்றவரைக் குற்றம் குறைகளிலிருந்து நீக்க முயல்கிறான்.

882. நம்முடைய அசுர குணங்களை விடாமலேயே பிறருடன் நடந்து கொள்வோமானால், அவர்களுக்குள்ளேயிருந்தும் அசுரக் குணங்களே வெளியாகும்.

883. பணிவாகிற கவசத்தை அணிந்து கொண்டால் யாரும்

நம்மைக் கெடுக்க முடியாது. பஞ்சு இழையை வாளால் வெட்ட முடியாது.

884. மனதார பக்தி செய்து மூப்பு, மரணம் முதலியவற்றின் பிடியிலிருந்து விடுபட்டு அமரனாகிறவன் நல்லபிள்ளை.

885. சராசரமாகிற எல்லாக் காட்சிகளுமே மனதை ஆதாரமாகக் கொண்டு எழுபவை. இந்த மனம், மனமற்றதாக ஆகிவிட்டால் பிறகு "துவைதம்" (இரட்டைத் தோற்றம்) என்ற அனுபவம் ஏற்படாது.

886. பற்று, அபிமானம் இவற்றைச் சூனியமாக்கிச் சிந்தனையைத் தவிர்த்து நிற்கும் மனிதன் வீட்டிலேயிருந்தாலும், எந்த வேலையிலும் பற்றுக் கொள்ள மாட்டான்.

887. பிறரிடம் ஆழ்ந்த பகைமை வைத்திருப்பவர்கள், பிறர் மனைவி, பிறர் சொத்தை விரும்புபவர்கள், பரநிந்தை செய்பவர்கள், பாவிகள், அசடர்கள் மனித உடல் கொண்ட அரக்கர்கள்.

888. ஸாதுவின் சாதியைக் கேட்காதே. அவரிடம் ஞான உபதேசத்தைப் பெற்றுக்கொள். வாளுக்கு மட்டும் விலை பேசு. உரையினால் என்ன பயன்?

889. எப்பொழுதும் உண்மை பேச வேண்டும். கலியுகத்தில் உண்மையைப் பிடித்துக் கொண்டுவிட்டால், வேறு ஸாதனை, பஜனை தேவையில்லை. ஸத்தியமே கலியுகத்தில் தவமாகும்.

890. எப்பொழுது நண்பன் எதிரே வருவானோ, அவனுக்கு மரியாதை செலுத்து. அவன் இல்லாத இடத்தில் அவனைப் புகழ். தேவைப்படும்போது கூச்சமில்லாமல் உதவு.

891. கெட்டவன் பண்டிதனாய் இருந்தாலும் கூட அவனுடன் கூடாதே. மணியுடன் இருப்பினும் பாம்பு அச்சத்துக்கு உரியது இல்லையா?

892. உடல், மனம், வாக்கு, இம்மூன்றிலும் ஒற்றுமையிருக்க வேண்டும்.

893. எந்த மனிதன் பிறர் எதிரே தெய்வத்தைப் பற்றிப் பேசிக் கொண்டே மனது, பெருமை, சொத்து போன்ற உலகக் கவலைகளில் ஈடுபட்டு இருக்கிறானோ, அவன் எப்பொழுதாவது மானமிழந்து ஆபத்தில் சிக்கிக் கொள்வான்.

894. சுயநலமே எல்லா அபராதங்களுக்கும், பாவங்களுக்கும் வேர் ஆகும். அந்தச் சுயநலத்தின் வேர் அறியாமை.

895. ஆசைகளை அழித்து, மனதை வென்றவன், மன அமைதியைப் பெற்றவன், அவன் அரசனாயிருந்தாலும் சரி, பிச்சைக்காரனாயிருந்தாலும் சரி, இந்த உலகத்தில் அவனுக்கு ஸுகமே.

896. அடங்காமல் கெட்ட வழியில் செல்லும் மனம்தான் மனிதனுக்குப் பெரிய பகைவன். இந்த மனதை வென்று ஸமத்துவத்தை அடைதலே பகவானுக்குச் செய்யப்படும் முக்கியமான ஆராதனையாகும்.

897. இந்த உலகில் வைராக்யம் என்ற சொத்தைப் பெற்றவன் மகிழந்த மனதுடையவன். பொருட்களிடத்துப் பற்றற்றவன். தானே கிடைத்த ப்ராரப்தத்தின் பயனை அனுபவிப்பவன். இந்தப் பிறவியிலேயே தன் கடமையை முடித்தவனாக ஆகிறான். (பிறவிப்பயனைப் பெறுகிறான்)

898. நம்பிக்கை, ப்ரேமை, நியமம் இவற்றுடன் ராம நாமத்தை ஜபிப்பாயாக. பிறகு முதல், நடு, இறுதி முக்காலங்களிலும் உனக்கு மங்களமே ஏற்படும்.

899. முட்டாள்களுடன் சேராதிருப்பதும், ஸாதுக்கள், வித்வான்கள் முதலியவர்களுடன் சேர்க்கை கொள்வதும், மதிக்கத் தக்கவர்களுக்கு மதிப்பளிப்பதும் மிக உயர்ந்த மங்களகரமான செயலாகும்.

900. மனம், சொல், உடலில் முழுமையாக அடக்கம் கொண்டவனாக இருப்பதே ப்ரம்மசர்யமாகும்.

॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் அறிவுரை நல்கும் நூல்கள்

**Code No.**

| | | |
|---|---|---|
| 1. | 127 | பயனுள்ள கதைகள் |
| 2. | 365 | பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள் |
| 3. | 423 | கர்ம ரஹஸ்யம் |
| 4. | 466 | ஸத்ஸங்கத்தின் ஸாரமான தத்வங்கள் |
| 5. | 499 | நாரத பக்தி ஸூத்ரம் |
| 6. | 536 | கீதை கற்பதன் பயன்கள் |
| 7. | 550 | திருநாமஜபத்தின் மஹிமை |
| 8. | 551 | தூய்மையான உணவுப் பழக்கம் |
| 9. | 553 | குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்? |
| 10. | 568 | சரணாகதி |
| 11. | 569 | உருவ வழிபாடு |
| 12. | 591 | மஹாபாவத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள் |
| 13. | 601 | பகவான் ஸ்ரீகிருஷ்ணன் |
| 14. | 606 | மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி |
| 15. | 607 | எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்? |
| 16. | 608 | பக்தராஜ ஹனுமான் |
| 17. | 642 | ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை |
| 18. | 643 | பகவான் உறையும் ஐந்து இடங்கள் |
| 19. | 646 | பல்சுவைக் கதைகள் |
| 20. | 655 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்!! |
| 21. | 741 | மஹாத்மா விதுரர் |
| 22. | 792 | முக்கியமான எச்சரிக்கை |
| 23. | 805 | தாய்மையின் அவல நிலை |
| 24. | 850 | மஹான்களுடைய அமுத மொழிகள் |
| 25. | 952 | மஹான்களின் மணி மொழிகள் |
| 26. | 953 | மஹான்களின் சீரிய உபதேசம் |
| 27. | 1007 | கடையோனுக்கும் கடவுட்காட்சி |
| 28. | 1110 | ஆயிரம் அமுதத் துளிகள் |
| 29. | 1117 | நாட்டின் இன்றைய நிலையும், அதன் விளைவுகளும் |
| 30. | 1134 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் |
| 31. | 1243 | உண்மையான சுகம் |
| 32. | 1246 | பக்த சரித்திரம் |
| 33. | 1289 | சாதனை நெறி |
| 34. | 1480 | செயல்கள் அனைத்தும் பகவானுக்கே |
| 35. | 1481 | பகவானை நேரில் காண வழி |
| 36. | 1482 | பக்தி யோகம் |

படம் (ஹிந்தி) ஜய ஸ்ரீராம் (எழுத்தில் ராமாயணம்)

॥ ஶ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் பாராயண நூல்கள்

**Code No.**

1. 389 கீதா மாதுர்யம் (பகவத்கீதா – வினா-விடை)
2. 600 ஸ்ரீஹநுமாந் சாலீஸா – மூலம்
3. 743 ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் (சமஸ்கிருதம்–தமிழ்)
4. 793 ஸ்ரீமத் பகவத்கீதா – மூலம் & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – மூலம்
5. 795 ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை
6. 800 ஸ்ரீமத் பகவத்கீதா–தத்வவிவேசனீ – [மூலம் – சமஸ்கிருதம்–தமிழ் – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை]
7. 823 ஸ்ரீமத் பகவத்கீதா – மூலம் (சமஸ்கிருதம்–தமிழ்) – பதவுரை–பொழிப்புரை
8. 1256 அத்யாத்ம ராமாயணம் – பொழிப்புரை
9. 1426 ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவநீ மூலம் (சமஸ்கிருதம்–தமிழ்) – பதவுரை–விளக்கவுரை 1 முதல் 9 அத்தியாயங்கள்
10. 1427 10 முதல் 18 அத்தியாயங்கள்
11. 1534 சுந்தரகாண்டம் (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்) – மூலம்–பொழிப்புரை
12. 1605 ஸ்ரீ உத்தவ கீதை (ஸ்ரீமத் பாகவத மகாபுராணம் – பதினோராவது ஸ்கந்தம்) – மூலம்–பொழிப்புரை
13. 1606 ஸ்ரீமந் நாராயணீயம் – மூலம்–பொழிப்புரை
14. 1618 சுந்தர காண்டம் (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்) – பொழிப்புரை
15. 1619 சுந்தர காண்டம் (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம) – மூலம்

எங்களது தமிழ்நாடு கிளை :

கீதா பிரஸ் புத்தக நிலையம்,
கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்–ஸ்டாப் அருகில்),
கோயம்புத்தூர் – **641 018. Ph. : 0422–3202521**

இப்புத்தகங்கள் **M.O., D.D.** யின் பேரில் அனுப்பி வைக்கப்படும். தபால் செலவு தனி.

 விசேஷ நாட்களில் விருந்தினர்களுக்குப் பரிசளிக்க ஏற்றவை. 

# Our English Publications

| Code | |
|---|---|
| 1318 | **Śrī Rāmacaritamānasa** (With Hindi Text, Transliteration & English Translation) |
| 1617 | **Śrī Rāmacaritamānasa** A Romanized Edition with English Translation |
| 456 | **Śrī Rāmacaritamānasa** (With Hindi Text and English Translation) |
| 786 | ,, ,, Medium |
| 1550 | **Sundara Kāṇḍa (Roman)** |
| 452, 453 | **Śrīmad Vālmīki Rāmāyaṇa** (With Sanskrit Text and English Translation) Set of 2 volumes |
| 564, 565 | **Śrīmad Bhāgavata** (With Sanskrit Text and English Translation) Set |
| 1159, 1160 | **Śrīmad Bhāgavata Mahāpurāṇa** only English Translation set of 2 volumes |
| 1080, 1081 | **Śrīmad Bhagavadgītā Sādhaka-Sañjīvanī** (By Swami Ramsukhdas) (English Commentary) Set of 2 Volumes |
| 457 | **Śrīmad Bhagavadgītā Tattva-Vivecanī** (By Jayadayal Goyandka) Detailed Commentary |

| Code | |
|---|---|
| 783 | **Abortion Right or Wrong You Decide** |
| 455 | **Bhagavadgītā** (With Sanskrit Text and English Translation) Pocket size |
| 534 | **Bhagavadgītā** (Bound) |
| 1658 | **Śrīmad Bhagavadgītā** (Sanskrit text with Hindi and English Translation) |
| 824 | **Songs from Bhartṛhari** |
| 1643 | **Rāmarakṣāstotram** (With Sanskrit Text, English Translation) |
| 494 | **The Immanence of God** (By Madan Mohan Malaviya) |
| 1528 | **Hanumāna Cālīsā** (Roman) (Pocket Size) |
| 1638 | ,, Small size |
| 1491 | **Mohana** (Picture Story) |
| 1492 | **Rāma Lalā** (Picture Story) |
| 1445 | **Virtuous Children** |
| 1545 | **Brave and Honest Children** |

**By Jayadayal Goyandka**

| Code | |
|---|---|
| 477 | **Gems of Truth** [ Vol. I] |
| 478 | ,, ,, [ Vol. II ] |
| 479 | **Sure Steps to God-Realization** |
| 481 | **Way to Divine Bliss** |

| Code | |
| --- | --- |
| 482 | **What is Dharma? What is God?** |
| 480 | **Instructive Eleven Stories** |
| 1285 | **Moral Stories** |
| 1284 | **Some Ideal Characters of Rāmāyaṇa** |
| 1245 | **Some Exemplary Characters of the Mahābhārata** |
| 694 | **Dialogue with the Lord During Meditation** |
| 1125 | **Five Divine Abodes** |
| 520 | **Secret of Jñānayoga** |
| 521 | **" " Premayoga** |
| 522 | **" " Karmayoga** |
| 523 | **" " Bhaktiyoga** |
| 658 | **" " Gītā** |
| 1013 | **Gems of Satsaṅga** |
| 1501 | **Real Love** |

**By Hanuman Prasad Poddar**

| | |
| --- | --- |
| 484 | **Look Beyond the Veil** |
| 622 | **How to Attain Eternal Happiness ?** |
| 483 | **Turn to God** |
| 485 | **Path to Divinity** |
| 847 | **Gopis' Love for Śrī Kṛṣṇa** |
| 620 | **The Divine Name and Its Practice** |
| 486 | **Wavelets of Bliss & the Divine Message** |

**By Swami Ramsukhdas**

| | |
| --- | --- |
| 1470 | **For Salvation of Mankind** |
| 619 | **Ease in God-Realization** |
| 471 | **Benedictory Discourses** |

| Code | |
| --- | --- |
| 473 | **Art of Living** |
| 487 | **Gītā Mādhurya** |
| 1101 | **The Drops of Nectar** (Amṛta Bindu) |
| 1523 | **Is Salvation Not Possible without a Guru?** |
| 472 | **How to Lead A Household Life** |
| 570 | **Let Us Know the Truth** |
| 638 | **Sahaja Sādhanā** |
| 634 | **God is Everything** |
| 621 | **Invaluable Advice** |
| 474 | **Be Good** |
| 497 | **Truthfulness of Life** |
| 669 | **The Divine Name** |
| 476 | **How to be Self-Reliant** |
| 552 | **Way to Attain the Supreme Bliss** |
| 562 | **Ancient Idealism for Modern day Living** |

**SPECIAL EDITIONS**

| | |
| --- | --- |
| 1411 | **Gītā Roman** (Sanskrit text, Transliteration & English Translation) Book Size |
| 1584 | ,, (Pocket Size) |
| 1407 | **The Drops of Nectar** (By Swami Ramsukhdas) |
| 1406 | **Gītā Mādhurya**( " ) |
| 1438 | **Discovery of Truth and Immortality** (By Swami Ramsukhdas) |
| 1413 | **All is God** ( " ) |
| 1414 | **The Story of Mīrā Bāī** (Bankey Behari) |